# எல்லாம் அபரிமிதம்

பற்றாக்குறை மனப்பான்மையை
விட்டொழித்து பிரபஞ்சத்தின் அபரிமிதத்தில்
இருந்து வேண்டுவதை ஈட்டுங்கள்...

ஏ.வி.ஆர்

ஒரு ஆல்ஃபா அட் ஒமேகா மைய வெளியீடு

# எல்லாம் அபரிமிதம்

ஏ.வி.ஆர்

பற்றாக்குறை மனப்பான்மையை
விட்டொழித்து பிரபஞ்சத்தின்
அபரிமிதத்தில் இருந்து
வேண்டுவதை ஈட்டுங்கள்...

ஒரு ஆல்ஃபா அட் ஒமேகா
மைய வெளியீடு

# CONTENTS


Title Page

Copyright

எல்லாம் அபரிமிதம்

பற்றாக்குறையும் குறுகிய மனப்பான்மை கொண்ட வாழ்க்கையும்

எல்லையில்லா ஆற்றல் மிக்க பிரபஞ்சம்

அறிவியல் பின்னணி

காந்த அலை கொள்கையும் குவாண்டம் தத்துவமும்

வான்காந்தமும் ஜீவகாந்தமும்

நாம் விரும்புவனவற்றை அபரிதமான எல்லையற்ற இறைவெளியில் இருந்து பெற

அபரிமிதமும் பிரபஞ்ச விதிகளும்

அபரிமிதமும் ஈர்ப்பு விதியும்

நமக்கு வேண்டுவனவற்றை அபரிமிதத்தில் இருந்து பெறுதல்

நிபந்தனை இல்லாமல் நிறைவாக கொடுங்கள் எல்லையில்லாமல் பெறுங்கள்

அபரிமிதமும் நன்றியுணர்வும்

உண்மையான வெற்றி என்பது நம்மிடம் உள்ளார்ந்து நிற்கும் புனிதத்தை உணர்த்துவதுதான்.

- தீபக் சோப்ரா

# எல்லாம் அபரிமிதம்

இந்த பூவுலகில் ஜீவ இனம் தோன்றி பல் லாயிரக்கணக்கான வருடங்கள் ஆகின்றன. வாழ்க்கை தோன்றி பலவிதமான மாறுபாடு களை சந்தித்து இன்று நாம் இப்போது வாழும் விதமாக பரிணாமம் வளர்ச்சி பெற்று இருக்கிறது. மனித இனத் தின் பரிணாம வளர்ச்சியில் வாழ்க்கை சூழ்நிலைகள், மாற்றங்கள், ஏற்றத் தாழ்வுகள் என பல நூற்றாண்டுக ளாக வாழ்வு மாறிக் கொண்டே வந்திருக்கிறது. பல் வேறு ராஜ்ஜியங்களின் எழுச்சியும், வீழ்ச்சியும், தனி மனித எழுச்சியும், வீழ்ச்சியும் சமகாலத்தில் நடைபெற்று வந்த கதைகளை, நாம் அறிந்த வரலாறு தோறும் நம் மால் காண முடியும். பிரிவினைகளும், சேர்க்கைகளும், இனமாக, மதமாக, குழுவாக மாறியதையும் இந்த பரி ணாமத்தில் நம்மால் காண முடியும். ஒரு சிறிய நுண் செல் உயிரினத்தில் தொடங்கி மனிதன் வரையில் உள்ள இந்த பரிணாம வளர்ச்சி பல்வேறு கட்டங்களை கடந்துதான் இன்றைய இந்த நிலையை எட்டியுள்ளது. வாழ்க்கையின் வேர்களை ஆய்வு செய்பவர்களுக்கும், செய்தவர்களுக்கும் வாழ்க்கை ஒரு புதிராகவே இருந்து வந்துள்ளது; வந்து கொண்டிருக்கிறது. அது டார்வினா கட்டும் அல்லது வேறு எந்த ஒரு அறிஞராகட்டும் அத்

தனை பேரையும் அது திக்கு முக்காட வைத்திருக்கிறது. அது இயற்கையின் ரகசியம். அப்படித்தான் இருக்கும்.

மனித வாழ்க்கையில் பல்வேறு விதமான மாற்றங்களை, பல்வேறு காலகட்டங்களில் நம்மால் கண்கூடாக காண முடிகிறது. வாழ்வியல் முறையில் தொடங்கி கட்டிடக் கலை, ஓவியங்கள், சிற்பங்கள், என எல்லாம் பறை சாற்றுவது இவற்றைத்தான். எல்லாவற்றிலும் பண்டைய காலத்தை காட்டிலும் மனிதன் மெச்சப்பட்ட நிலையி லேயே வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்றே சொல்ல வேண்டும். பல்வேறு விதமான கண்டுபிடிப்புகள், அறிவி யல் மற்றும் தொழில்நுட்ப முன்னேற்றங்கள் மனிதனை சிறப்பாக வாழ வழி செய்திருக்கின்றன என்றே சொல் லவேண்டும். அணு விஞ்ஞானமும், கடவுளின் நுண் துகள்களை ஆராய்கிற மெட்டாபிசிக்ஸ் (Metaphysics) என்கிற நுண்இயற்பியல் பிரிவு என அறிவியல் துறை தொடர்ந்து சாதனை படைத்து கொண்டுதான் இருக் கிறது. எனினும் இவ்வளர்ச்சியின் அடிப்படையில் மனி தன் சிறப்பாக வாழ்கிறானா என்று கேட்டால் மௌனம் மட்டுமே பதிலாக எஞ்சியிருக்கிறது.

நமக்கு எப்போதும் ஒரு குறைபாடு இருந்து வந்து கொண்டே இருக்கிறது. “சிலர் சந்தோஷமாக வாழ் கிறார்கள், ஆனால் நம்மால் முடியவில்லையே”, “சில ருக்கு வேண்டும் எல்லாம் கிடைக்கிறது. ஆனால் நமக்கு கிடைக்கவில்லையே”, என்பது போன்ற குறை கள் மனதில் எப்போதும் ஓடிக்கொண்டே தான் இருக் கின்றன. “ஏன் இந்த ஏற்றத்தாழ்வு? கடவுளுக்கு ஏன் இந்த பாகுபாடு,” என்று கேட்காத மனித மனம் இருக் கவே முடியாது. பலர் அந்த கேள்வியில் பதிலைக் கண் டுபிடித்து ஞானி ஆகி இருக்கின்றனர். சிலர் குறைபா டுகளால் குற்றம் கண்டுபிடித்து தமது செயலின்மைக்கு மற்றவர்களை குறை சொல்லி சாடியும் வாழ்ந்து வந்து கொண்டிருக்கின்றனர். போதாக் குறைக்கு அவர்கள்

“கடவுளையும்” அந்த புகாருக்குள் இழுத்து கொள்கின் றனர். இந்த பற்றாக்குறைக்கு காரணம் என்ன என்பதை மனதளவிலும் நினைக்காத இவர்கள், “இதற்கு பாகு பாடு விதித்த கடவுள் தான் இந்த நிலைக்கு காரணம்,” என்று படைத்தவனை சாடுகின்றனர்.

உண்மையில் கடவுள் அல்லது பிரபஞ்ச சக்தி என்ன என்பதையும் அது செயல்படும் விதத்தையும் அறிந்த வர்கள் குறை சொல்லி வாழ மாட்டார்கள். அவர்கள் எல்லாவற்றிலும் நிறைவே காண்பார்கள். ஆனால் அந்த அறிவு ஒரு விதத்தில் ரகசியமாகவே காக்கபடுகிறது. எளிதில் எல்லாருக்கும் புலப்படுவதில்லை அது. எத் தனை அறிஞர்கள் வந்தாலும், எத்தனை குருமார்கள் போதித்தாலும் மனம் அந்த ரகசியத்தை அறியும் வரை மனித மனதில் ஒரு வித பற்றாக்குறை எண்ணம் இருந்து கொண்டே இருக்கும். மனிதர்கள் துன்பத்தில் உழன்று கொண்டே தான் இருப்பார்கள்.

பற்றாக்குறை எண்ணம் கொண்ட மனிதர்கள் தனது தேவை அல்லது ஆசையை பூர்த்தி செய்யும் திறனற்ற வர்கள். இதற்கு மூலக் காரணம் அவர்களது அந்த “பற் றாக்குறை” எண்ணமே. எத்தனை விதமான பயிற்சிகள், அப்பியாசங்கள், தியான வழிமுறைகளை அவர்கள் பின் பற்றினாலும் அவர்களது ஆசை “நிறைவேறாத” ஆசை யாகவே இருக்கும்.

இதற்கு மூலக்காரணம் முன்பு கூறியது போல் வேறு யாரும் அல்ல. அவர்கள் மட்டுமே, அவர்களது அந்த பற்றாக்குறை எண்ணம் மட்டுமே காரணம். ஆனால் அவர்கள் எல்லையற்ற ஒன்றை பற்றி அறிந்திருந்தால் அந்த எண்ணம் அவர்களுக்கு வந்திருக்காது. அதுதான் பரம்பொருளாக, சிவமாக, கடவுளாக, பரப்பிரம்மமாக, அண்ட சராசரங்களையும், கோடானு கோடி நட்சத்தி ரங்களையும் ஜீவராசிகளையும், தன்னுள் அடக்கிய சர்

வமுமாக இருப்பதை உணர்ந்திருந்தால் இன்றைக்கு இந்த நிறைவேறாத ஆசைகளும், பற்றாக்குறை எண்ண மும் வந்திருக்கவே வந்திருக்காது. "எல்லாம் அபரிமி தம்" என்ற எண்ணம் அவர்களிடையே தழைத்தோங்கி இருக்கும்.

தமது அனைத்து தேவைகளும் பூர்த்தியாக, அனைத்து நியாயமான ஆசைகளும் ஈடேற அவர்கள் அந்த அபரி மிதமான எல்லையற்ற பிரபஞ்சத்தோடு இணங்கி இருப் பர்.

"ஞானம்" என்பது எதோ ஒருவனுக்கு மட்டும் கிடைக்க கூடியது அல்ல. அவர்கள் அந்த எல்லையிலா பரம்பொ ருளை கண்டு கொண்டவர்கள். அந்த பேரானந்தத்தில் திளைப்பவர்கள். அதை அறிந்து கொண்டு அது நம் மில் இயங்கும் விதத்தை புரிந்து கொண்டால் வாழ்வு இன்ப மயமாகும். அளப்பற்கரிய சக்தியை அது நம்மிடம் செலுத்தும். அது நமக்கு என்ன வேண்டுமோ அதைக் கொண்டு வந்து தரும். ஆனால் அந்த அபரிமிதத்தின் சக்தியை உள்ளார்ந்து வாங்கி கொள்ள, அதை புரிந்து கொள்ள ஆயத்தமாக வேண்டும். அதனை, அதன் ஆக்க சக்தியை புரிந்து கொள்ள எத்தணிக்க வேண் டும். இந்த வாழ்வும் அங்கிருந்தே வந்தது. எல்லாம் அத னுள் தான் என்கிற இந்த புரிதலில் வாழ்வு மாறிப்போ கும். அபரிமிதத்தின் சக்தி எண்ணிலடங்கா வெற்றியை எங்கும் எதிலும் தரும்.

இந்த அபரிமிதத் தன்மையை உணர்த்துவதே இந்த நூலின் நோக்கம்.

# பற்றாக்குறையும் குறுகிய மனப்பான்மை கொண்ட வாழ்க்கையும்

வாழ்க்கையில் எல்லோருக்கும் என்ன தேவைப்படுகிறது? எல்லோரும் தாம் ஆசைப்படும் விஷயங்கள் நிறைவேறி விடாதா என்றே ஏங்குகின்றனர். தங்கள் கனவு வாழ்க்கை அமைந்து விடாதா என்றே ஏங்குகின் றனர். அது ஒரு கனவு இல்லமாக இருக்கலாம், அளப் பற்கரிய செல்வ வளமாக இருக்கலாம், நல்ல வாழ்க்கை துணையாக இருக்கலாம், நல்ல வேலை வாய்ப்பாக இருக்கலாம், அல்லது தொழில் வாய்ப்பாக இருக்க லாம். ஆனால் இதில் பெரும்பாலானோர் இந்த முயற்சி யில் தோல்வி அடைந்து விடுகின்றனர் என்றே சொல்ல

வேண்டும். இந்த "பெரும்பாலானோர்" ஒரு குறுகிய வட்டத்திலேயே எப்போதும் வாழ்கின்றனர். அவர்கள் அந்த வட்டத்தை விட்டு வெளியே வர மறுக்கின்றனர். அவர்கள் அதைத் தான் பாதுகாப்பு என்று நினைக் கின்றனர். அதே நேரம் தாம் தேர்ந்தெடுத்த பாதுகாப் பான வாழ்க்கை தமக்கு போதவில்லை எப்போதும் ஏதோ ஒரு குறை இருக்கிறது என்று புகார் தெரிவித்து கொண்டே இருப்பர். மற்றவர்கள் வாழ்க்கை நலமாக இருக்கிறது என்று பொறாமை கொள்வர். உண்மையில் அவர்கள் பிரச்சினைக்கு எது காரணம் என்பதை புரிந்து கொள்வதே இல்லை.

தமது வாழ்க்கையில் உள்ள குறைபாடுகளுக்கு மற்ற வர்களே காரணம் என்று சுட்டிக்காட்டும் இத்தகைய மனிதர்களை நான் எல்லா இடத்திலும் காணுவதுண்டு. எப்போதும் இவர்கள் "இந்த உலகம் கெட்டுப்போய் விட் டது. எல்லா பணமும் ஒரு தரப்பினரே எடுத்து கொள் கின்றனர். எங்கு பார்த்தாலும் லஞ்சமும் ஊழலும் தலை விரித்து ஆடுகிறது. ஏழைகள் இருப்பதற்கு இவையே காரணம். பணம் வேறு யாரிடமும் தங்குவதை இவர்கள் விரும்புவதில்லை", போன்ற குற்றச்சாட்டுகளை அடுக் கடுக்காக மற்றவர்கள் மேல் சாட்டிய வண்ணம் இருப் பர். இவர்களது ஆழ்மனதில் சாதாரணமாக தாமும் அது போல் வாழ்ந்து விட மாட்டோமா, தமக்கு மட்டும் இது போல் பணத்தை சேகரிக்க வாய்ப்பு கிடைக்க வில் லையே என்ற எண்ணம் ஆழமாக பதிந்து இருக்கும். இன்னொரு சாரார் "நமக்கு ஆண்டவன் இந்த வாழ்க் கையைத்தான் நிர்ணயித்திருக்கிறான். இது விதியின் செயல். நம்மால் என்ன செய்ய முடியும்", என்று எதற்கெ டுத்தாலும் விதியை பழிப்பார்கள்.

இவர்களது எண்ணம் ஒரு சாரார் இந்த உலகத்தையே ஏமாற்றி செல்வம் குவிக்கிறார்கள் என்ற எண்ணமும், அந்த ஒரு சாரார் மட்டுமே பணம் படைக்க லாயக்கா

னவர்கள் என்ற எண்ணமுமே ஆகும். தம்முடைய இய லாமையை மறைக்க மற்றவர்களை குற்றம் சொல்லுத லும், விதியை பழித்தலும் போன்ற செயல்களை செய்ப வர்கள் இவர்கள். உண்மையில் பிரச்சினை அந்த ஒரு சாராரிடமோ அல்லது விதியிடமோ இல்லை. பிரச்சி னைக்கு காரணம் இவர்களே. இந்த "இவர்களை" நமது அன்றாட வாழ்க்கையில் பெரும்பாலும் காண முடியும். எதையுமே குறுகிய கண்ணோட்டத்திலேயெ காணக் கூடியவர்கள் இவர்கள். பணம் மட்டுமல்ல இவர்களது குறைபாடு. எல்லாவற்றிலும் குறை காண்பர். வாழ்க் கையை நன்றாக வாழ பணம் தான் முக்கிய பங்கு வகிக்கிறது என்பது இவர்களது மனதில் ஆணித்தரமாக பதிந்து இருக்கும். ஆனால் அதை பற்றிய எதிர்மறை சிந் தனைகள் மேற்கூறியவைகளை போல அவர்கள் ஆழ் மனதில் நங்கூரம் பாய்ச்சியது போல பதிந்து இருக்கும்.

அவர்களது மனதில் இருக்கும் குறுகிய கண்ணோட் டம் காரணமாக எதிலும் குறை காணும் பழக்கமுடைய இவர்களை பெரும்பாலும் யாரும் அதிகம் விரும்புவ தில்லை. அப்படியே விரும்புகிறார்கள் என்றாலும் அது ஏதாவது சுயலாபத்துக்காகத்தான் இருக்கும். இவர்க ளது குற்றம் சாட்டல் தனது அருகிலுள்ள சொந்த பந் தங்களை போலும் விட்டு வைக்காது. அல்லது விதியே கதி என்றிருப்பர். கோயில் கோயிலாக சுற்றுவர். ஆனால் வாழ்க்கயில் எந்த முன்னேற்றமும் இருக்காது. அதை யும் குறை சொல்வர், “கோயில் கோயிலாக போகிறேன். கடவுள் கருணை காட்டவே மாட்டேன் என்கிறார்", என்று.

இந்த எல்லையில்லா பிரபஞ்சத்தில் எல்லை கட்டி கொண்டு வாழும் இவர்களை எண்ணும் போது எனக்கு அதிகமான அனுதாபம் தான் தோன்றும். இவர்கள் எவ் வளவு பெரிய விஷயத்தை தெரியாமல் வாழ்க்கையை இழக்கிறார்கள். தன்னுடைய குறுகிய வட்டத்தை

தாண்டி வாழ்க்கையில் வேறு எதுவும் இல்லை என்று கிணற்று தவளைகளாகவே வாழ்கின்றனர். அங்கு அந்த கிணற்றை தாண்டி இருக்கும் மிகப்பெரிய மகா சமுத் திரம் எப்படி அந்த கிணற்று தவளைக்கு தெரிவதில் லையோ அதே போல் தமது வாழ்க்கையை சிறப்பாக மாற்றும் ஒரு எல்லையில்லா சமுத்திரம் இருப்பதை அவர்களுடைய குறுகிய நோக்கு காண்பதே இல்லை.

***“ஒரு மனிதன் எதை பற்றி நினைக்கிறானோ, உணர்கிறானோ, மேலும் அதையே நம்புகிறானோ, அதற்கேற்ப அவனது புற உடலும், சூழ்நிலைகளும், சந்தர்ப்பங்களும் அமைந்து விடுகிறது"***

***டாக்டர் ஜோசப் மர்பி "ஆழ்மனத்தின் அற்புத சக்தி"***

இப்போது சொல்லுங்கள் குறுகிய மனப்பான்மை படைத்தவர்களுக்கு சுற்றியுள்ள சூழ்நிலைகள் பிரச்சி னையா, அல்லது அந்த சூழ்நிலைகளை படைப்பவர் களே அவர்கள் தானா? நிச்சயம் அவர்கள் தான். தம்மை மட்டுமல்லாது அவர்கள் புறச்சூழலையும் தமது குறு கிய வட்டத்துக்குள் சிக்க வைத்து விடுகின்றனர். நன் றாக கவனிக்கவும் புறத்தில் உள்ள மற்ற மனிதர்களை அல்ல. நான் கூறுவது சூழ்நிலைகளை.

இன்னும் ஒரு உதாரணம் நம்முடைய உபநிஷதங்களில் இருந்து சொன்னால் பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறேன்

***உங்கள் ஆழமான ஆசை எதுவோ அதுவே நீங்கள் உங்கள் ஆசை எதுவோ அதுவே உங்கள் எண்ணம் ஆகிறது உங்கள் எண்ணம் எதுவோ<br>அதுவே உங்கள் செயல் ஆகிறது. உங்கள் செயல் எதுவோ அதுவே உங்கள்<br>வாழ்க்கை (விதி) ஆகிறது.***

*(பிருஹதாராண்யக உபனிஷதம் - அதி 4 : செ. 5)*

ஆம் ஒரு மனிதனே அவனது விதிக்கு காரணமாகின்றான். ஆசை மற்றும் எண்ணத்தில் பரிணமித்து அது செயலாக வடிவம் பெற்று அவனது விதிக்கு வித்திடுகிறது. அப்போது அவனது ஆசைகளையும், எண்ணங்களையும் தூய்மை பெற்றால் அவனது வாழ்க்கை மேன்மை பெறாதா என்ன?

ஆசையை துறக்க சொல்லவில்லை. ஆனால் தூய்மை படுத்த சொல்கிறேன். அதைப் பற்றி பின்னர் பார்ப்போம். சம சிந்தனை கொண்ட சமீப காலத்தில் மிகவும் பிரசித்தி அடைந்த "ரகசியம் (The Secret)" புத்தகம் மற்றும் ஆவணப்படம் எல்லாரையும் வசிகரித்தது. ஆனால் அது எல்லாவற்றையும் வெளியே தெளிவாக சொல்லி விடவில்லை. சில விஷயங்களை ரகசியமாகவே வைத்தது. அதை படித்தவர்கள் ஏன் தமக்கு அதில் கூறியவாறு எதுவும் செயல்படவில்லை என்று எண்ணுவதுண்டு. அதற்கு காரணம் மேலும் காக்கப்பட்ட ஒரு பிரபஞ்ச ரகசியம். அதை நாம் அடுத்து வரும் அதிகாரத்தில் பார்ப்போம்.

# எல்லையில்லா ஆற்றல் மிக்க பிரபஞ்சம்

பண்டைய காலம் முதலாக ஒரு மாபெரும் ரகசியம் பல தலைமுறைகளாக வழி வழியாக கடந்து வந்துள்ளது. அந்த காலத்தில் இது பெரும்பாலும், அதை ஏற்றுக் கொள்ள தயாராக இருந்த, தனி சிறப்பு வாய்ந்த நபர்களிடம் ரகசியமான, பாதுகாப்பான குரலில் வாய்வழியாகக் கூறப்பட்டு வந்துள்ளது. இந்த ஞானம் பொதுமக்களின் கிரகிக்கும் தன்மைக்கு பொருத்தமானது அல்ல என்றும் ஆபத்தானது என்றும் கருதப்பட்டது. அதனால் இப்போது வரை அது மறைக்கப்பட்டு, ஒடுக்கப்பட்டு தான் வந்துள்ளது. ஆனால் வழி வழியாக வந்த ஞானியர், குருமார்கள் அதனை இலை மறைக்காயாகவும், தனது அன்பார்ந்த சீடர்களுக்கு தெள்ள தெளிவாகவும் போதித்து விட்டு தான் மறைந்துள்ளனர். நமது பல்வேறு புராணங்களிலும், வேத நூல்களிலும், உபனிஷதங்களிலும் கூட அதனை பற்றிதான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பெரும்பா

லும் தெளிவான நேரர்த்தங்கள் கொண்டதாக அவை அமையவில்லை. மேலும் நாகரீக வளர்ச்சியும், அதன் பின்னர் வந்த இன பாகுபாடும் அவையை நேரே அர்த் தம் கொள்ள எழுதப்பட்ட மொழிகளை பொதுமக்கள் படிக்க விடாத படி செய்தன. நாளடைவில் ஒரு குறிப் பிட்ட இனத்தவர் மட்டுமே அதை இனம் கண்டுக் கொள்ளலும், அதன் உண்மையை புரிந்து கொள்ளலும் ஆகும் என்று நிலைமை மாறியது. ஆனால் அதற்கு ஒரு காரணமும் இருக்கிறது. புரிந்து கொள்வதற்கு மிக எளி மையான அந்த ரகசியமானது சாதாரண கதியில் வாழும் மனிதர்கள் கையில் கிடைத்து விட்டால் மனிதன் தன் இஷ்டத்துக்கு வாழ ஆரம்பித்து விடுவான் என்று முன் னோர்கள் பயந்ததும், அதன் அடிப்படையில் அது ஆட் சியாளர்கள், மன்னர்கள், அதிகார வர்க்கத்துக்கு உட் பட்டவர்களால் அவர்களுக்கு மட்டும் பயன் படும் விதம் மாற்றபட்டது. ஆனால் இப்போது ஒரு "ஆன்மீக சிந் தனை புரட்சி மனித சமுதாயத்திடையே ஏற்பட்டுள்ளது. அதன் காரணமாக அது இப்போது தன்னைத் தானே வெளிப்படுத்தி கொள்ள ஆரம்பித்துள்ளது.

கூண்டுகளில் இருந்து விடுவிக்கப்பட்ட பாடும் பறவை களை போல உலகின் பல மூலைகளில் இருந்தும் இந்த ரகசியம் விடுவிக்கப் பட்டுள்ளது. பழங்குடி கலாச்சா ரங்களில் உள்ள குருமார்கள், மெய் ஞானத்துறவிகள், சித்தர்கள் போன்றவர்களிடம் இருந்து அது வெளிப்பட் டிருக்கிறது. இதனை பற்றி அறியும் போது, “இவ்வளவு தானா?” என்ற கேள்வி எழும் அளவுக்கு அது மிக சாதா ரணமானது. ஆனால் நம் முன்னோர்கள் பாதுகாத்து வந்தது இதைத்தான். ஆனால் அது ரகசியமாக காக்கப் பட்டு வந்தது. வெளிப்பட தோதுவான நேரம் கனிந்த் ததினால் இப்போது வெளிப்பட ஆரம்பித்து இருக்கிறது. யதார்த்தத்தின் உண்மையான இயல்பை பற்றிய நவீன

போதனைகளில் போலும் மெல்லிய இழை போல இது தன்னைத் தானே ஊடுருவி ஈடுபடுத்தி கொண்டுள்ளது.

வாழ்க்கை தானாக நிகழ்கிறது. விபத்துக்கள், நோய் கள், வன்முறை, பெருந்துன்பம் அல்லது துரதிர்ஷ்டம் போன்றவற்றிற்கு நாம் பலியாகிறோம் போன்ற வழி வழி யாக வந்த நம்பிக்கைகளோடு நீங்கள் வளர்ந்திருக்க கூடும். விதியும், கர்மாவும் தான் உங்களை கட்டுப்ப டுத்தி ஆள்வதாக நீங்கள் நினைக்க கூடும். ஆனால் "விதியை மதியால் வெல்லலாம்" என்ற பழமொழியை யும் நமக்காக நம் முன்னோர்கள் இலை மறைக்காயாக ஏதோ ஒன்றை சொல்லி விட்டு சென்றிருக்கின்றனரே.. அதைப் பற்றி என்றாவது யோசித்திருக்கிறோமா?

இப்படி கூட நீங்கள் நினைக்க கூடும். கடவுள் எல்லாவற் றையும் தனது கட்டுப்பாட்டில் வைத்துள்ளார். எனவே நல்லதோ கெட்டதோ என்ன நடந்தாலும் அதை நீங் கள் விரும்பியாக வேண்டும் அல்லது அதை அப்படியே ஏற்றுக்கொண்டாக வேண்டும் என்று உங்கள் வளரும் பருவத்தில் உங்களுக்கு போதித்திருக்க கூடும். நீங்கள் வாழ்க்கையில் ஏமாற்றமடைய கூடாது மனம் சோர்வ டையக் கூடாது என்று முன்னோர்கள் நல்ல நோக்கத் தில் எடுத்த நடவடிக்கைதான் இது. சுவர்க்கமும் நர கமும் என்ற விஷயங்களை ஏற்படுத்தி மக்களை நல் வழிப்படுத்துவதாக அந்த நடவடிக்கைகள் அமைந்தன. ஆனால் அதே பெரியவர்கள் சில கதைகள் மூலம் "சுவர்க்கமும் நரகமும் இங்கேயே தான் இருக்கிறது" என்ற சங்கேத வாக்கையும் விட்டு சென்றுள்ளதை கவ னித்தீர்களா? இது போல பல சங்கேதங்கள் மனித குல வரலாற்று வழி நெடுகிலும் காணமுடியும். ஆனால் அவற்றை வெறும் கதைகளாக மட்டுமே நாம் கண்டி ருப்போம். சுவர்க்கமும் நரகமும் இங்கேயே தான் என்ற மேலான அர்த்தம் மட்டும் புரிந்து வைத்திருப்போம். அதன் உள்ளர்த்தத்தை உள்வாங்க நம்மை நாம் தயார்

படுத்தவில்லை. இல்லை அது எளிதில் புரிந்து கொள்ள முடியாதது என்று நமக்கு கற்றுக் கொடுக்கப்பட்டிருக் கும். அதுதான் வாஸ்தவம்.

மேலும் விதியின் வசப்பட்டிருக்கும் நாம் ஆடம்பர வாழ்க்கைக்கு பகல் கனவு காணக்கூடாது, பொருள் ஆசை கூடாது என்று எச்சரிக்கை விடப்பட்டிருக்கும். இவை அனைத்தும் ஒரு சாரார் செய்த சூழ்ச்சியும் மற்றொரு புறத்தில் அந்த சூழ்ச்சி காரணமாக ஏற் பட்ட மொத்த மனிதகுலத்தின் நினைவலையில் குறு கிய மனப்பான்மையுமேயாகும். நமது முன்னோர்களும் இதற்கு விதி விலக்கல்ல. நமது பெற்றோரோ அல் லது அவர்களது பெற்றோரோ குறுகிய மனப்பான்மை கொண்டிருந்தால் அதற்கு காரணம் அவர்களும் பலி கடா ஆக்கப்பட்டது தானே யொழிய வேறொன்றும் இல்லை. அடக்குமுறை ஆட்சியாளர்களாலும், அந்த காலங்களில் நிலைக் கொண்டிருந்த இன பேத சூழ்நி லைகளாலும் அது மறைக்க பட்டிருந்தது.

ஆனால் இப்பிரபஞ்சத்தின் மாபெரும் ரகசியத்தை நீங் கள் அறிந்து கொண்டால், நீங்கள் உங்களை ஒரு பலி கடாவாக ஒரு போதும் கருத மாட்டீர்கள். நீங்கள் தெய் வீகத்தின் ஒரு படைப்பு சிதறல் என்பதை உணர்ந்து கொள்வீர்கள். உங்கள் சக்தி வெளியே உள்ள யாரோ ஒருவரிடம் இல்லை அல்லது ஏதோ ஒன்றிடம் இல்லை என்பதையும், உங்களின் உண்மையான சக்தி உங்களி டம் தான் உங்களுக்குள்தான் ஒளிந்து இருக்கிறது என் பதையும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

***நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை***
***நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய் கையை***
***அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதி யாய்***

*எனக்குள்நீ உனக்குள்நான் இருக்குமாறு எங்ஙனே*

*- சிவ வாக்கியர்*

மேலும் நான் மவுனம் காக்க விரும்பவில்லை. இந்த பிரபஞ்சத்தில் என்றும் நிலவி வரும் விதி ஒன்று அது. அதுதான் அபரிமிதம். இது ஒரு உலகளாவிய விதி. இதற்கு விதிவிலக்கே கிடையாது. அண்டமாய் அகண் டமாய் என்று சிவவாக்கியர் அகக்கண் நோக்கி பகர்ந்த இறைத்தத்துவம் இதுவே. இதற்கு எந்த சாக்கு போகுக ளும் கிடையாது. மறைமுகமான நிபந்தனைகள் எதுவும் கிடையாது. புதிய இயற்பியல் கண்டறிந்துள்ள அகவிழிப் புநிலையை சார்ந்தது அது. அறிவியல் இப்போது தான் அதனை இனம் கண்டுகொள்ள துவங்கி இருக்கிறது என்றாலும், இது தொன்று தொட்டு பல்வேறு விதமான காலங்களில் பல்வேறு விதமான இலக்கியங்களில், நூல்களில் இடம் பெற்றிருக்கிறது. அதற்கு பல ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் வாழ்ந்த சிவ வாக்கியர் பாடலே சான்றாகும்.

இப்போது அதனை இன்னும் ஆழமாக பார்ப்போம். உண்மையில் இந்த உலகம் என்பது ஒரு திடமான பொருள் அல்ல. இது நாள் வரை எதனை பௌதீக யதார்த்தம் என்று எதை நாம் நம்பிக் கொண்டிருந் தோமோ, கொண்டிருக்கிறோமோ, அது உண்மையில் ஒரு பரந்து விரிந்த ஆனால் ஒன்றிணைக்கப்பட்ட ஆற் றல் தான். இந்த முடிவில்லா ஆற்றலைத்தான் நாம் மூல சக்தி என்றும், கடவுள் என்றும், இறைநிலை என்றும், பரம்பொருள் என்றும், பிரம்மம் என்றும், ஹோலி ஸ்பி ரிட் என்றும், பிரபஞ்சம் என்றும் காலம் காலமாக நாம் இட, இனத்திற்கு தகுந்தாற்போல் வழங்கி வருகிறோம். இந்த எல்லையற்ற தெய்வீக ஆற்றல் தன்னுள்ளே

அடக்கி வைத்திருக்கும் சக்தியானது அபரிமிதமானது. அந்த ஆற்றல் அபரிமிதமானது. எல்லையற்றது. பரந்து விரிந்தது. ஒன்றோடு ஒன்று இணைந்தது. இசைந் தது. உண்மையில் நமது பிரிவு என்பது ஒரு மாயை. நாம் அனைவரும், அனைத்து ஜீவ ராசிகளும் ஒன்றோ டொன்று பிணைக்கப்பட்டவர்கள். ஒவ்வொரு மூலக் கூறும் பிணைக்கப்பட்டது. அண்ட இயக்கமும், பிண்ட இயக்கமும் ஒரே மாதிரியானது. அதைத்தான் திருமூலர்

“அண்டத்திலே உள்ளது பிண்டத்திலே உள்ளது" என்று தெளிவாக இயம்பியுள்ளார். கடவுளின் ஆற்றல்மிக்க உடலில் உள்ள உயிரணுக்களே நாம். அல்லவா?

உலகை நீங்கள் ஓர் ஆற்றலாக பார்க்கும் பொழுது, நாம் சதையோடும் எலும்போடும் கூடிய திடப்பொருள் அல்ல, மாறாக அதிர்வுகளால் ஆனவர்கள் என்பதை உணர்வீர்கள். அனைத்தும் அந்த அதிர்வலைகளின் ஆற்றலே. அது கண்ணுக்கு புலப்படும் ஆற்றலாகவும் செயல் படுகிறது. அல்லது எண்ணம், சமிக்ஞை போன்ற கண்ணுக்கு புலப்படாத ஆற்றலாகவும் செயல்படுகிறது.

நவீன கால அறிவியல் படி இப்பிரபஞ்சத்தின் 90 சதவீ தமானது "இருண்ட பொருள்" என்ற கண்ணுக்கு புலப் படாத ஆற்றல் அல்லது பொருளால் ஆனது என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அதாவது இயங்கும் நிலையில் உள்ள அண்ட சராசரங்களும் கோள்களும் வெறும் 10 சதவீதம் தான். அதனை சுற்றியுள்ளா இயங்கா நிலை யில் உள்ள அந்த இருண்ட பொருள் என்னும் பேராற் றல் தான் இயங்கு நிலையில் உள்ள அனைத்தையும் தாங்கி நிற்கிறது. மனம் பிரபஞ்சத்தை பற்றி சிந்தித்து பார்த்தால் இது சற்று விளங்கும். அந்த 90 சதவீதம் என் பது கூட ஒரு பொய்க்கணக்குதான். காரணம் அது எல் லையற்றது. நிரந்தரமானது. அது தான் பிரபஞ்சத்தின் பரிமாணங்கள் என்று மெய்ஞ்ஞானிகள் சுட்டிக்காட்டி

யது. அவர்களால் சிவமையம் என்று பெயரிடப் பட்டது. பல்வேறு கலாச்சாரங்களில் பல்வேறு பெயர்கள். எங்கும் நிறை-ந்துள்ள ஹோலி ஸ்பிரிட்டும் அதுவே.

***நானதேது நீயதேது நடுவில் நின்றதேதடா***
***கோனதேது குருவதேது கூறிடும் குலாமரே***
***ஆனதேது அழிவதேது அப்புறத்தில் அப்புறம்***
***ஈனதேது ராம ராம ராமவென்ற நாமமே***

***சிவ வாக்கியர்***

புராண நூல்களில் கூறியுள்ள படி "இயக்கமும் நானே இயங்குபவனும் நானே" இப்போது விளங்குகிறதா?

இந்த ஆற்றல் அபரிமிதமானது. அது எல்லோருள்ளும் நிறைந்து காணப்படுவது. அதனால் தான் இந்த மொத்த பிரபஞ்சத்தையும் கடவுளாக உருவகப்படுத்துகிறோம். அதனுள் இருக்கும் துகள்களாக தெய்வீகச் சிதறல்க ளாக நம்மை நாம் பாவித்து கொள்கிறோம். "எது பெறப் பட்டாலும் இங்கிருந்தே பெறப்படுகிறது. எது தரப்பட்டா லும் அது இங்கிருந்தே தரப்படுகிறது" , என்று இயேசு பைபிளில் கூறியதின் பொருள் இதுவே.

நாம் விரும்பும் எதையும் பெறக் கூடிய, நாம் செய்ய விரும்பும் எதையும் செய்யக்கூடிய, நாம் எதை விரும் புகிறோமோ எதுவாக இருக்க விரும்புகிறோமோ அது வாக ஆகக்கூடிய சாத்தியக்கூறு உள்ள ஒரு மாயாஜால தோற்றம் போல தோன்றுகிற, ஆனால் ஒரு உண்மை யான யதார்த்தத்துக்குள் அது நம்மை அழைத்து செல் கிறது. எல்லாம் அங்கு அபரிமிதம். நாம் காணும் பொரு ளாகட்டும், பணமாகட்டும், வாழ்க்கையாகட்டும் எல் லையில்லாமல் விளங்கும் அதன் பொருள்தன்மையே அது. எல்லாம் அந்த அபரிமிதத்தின் வெளிப்பாடே.

உண்மையில் நாம் நமது கனவுகளின் உலகத்தில் அல்லது பயம் நிறைந்த உலகத்தில் அல்லது அவற்றிற்கு இடையே உள்ள ஒரு மாயை நிறைந்த உலகத்தில் சஞ்சரித்து கொண்டிருக்கிறோம் என்பது தான் உண்மை. ஆனால் இந்த அபரிமிதத்தில் நமக்கு நாமே வகுத்து கொண்டுள்ள எல்லைகள் தவிர வேறு எதுவும் கிடையாது. குறுகிய மனப்பான்மை உடையவருக்கு இந்த அபரிமிதத்தின் உண்மையான ஆற்றல் புரிவதே இல்லை. ஆனால் புரிந்து கொண்டவர்களுக்கு அது பயக்கும் நன்மைகளும் அபரிமிதமானவை. வரலாற்று சுவடுகளில் சாதனை புரிந்த பலரும் இந்த ஆற்றலை உணர்ந்தவர்களே. செல்வந்தர்களும் இந்த ஆற்றலை தனக்கு துணையாக அழைத்துக் கொண்டவர்களே. இப்படி பலருக்கும் உதவிய அந்த ஆற்றல் குறித்த உண்மையான புரிதல், உங்களுக்கும் உங்கள் வாழ்வு வளமாக உதவும்.

அதற்கு முதல் படி, உங்களிடம் உள்ள குறுகிய மனப்பான்மையை விட்டொழித்து, எல்லாம் அபரிமிதம் என்ற பேருண்மையை உணர்ந்து கொள்வதே.

# அறிவியல் பின்னணி

நமது மனத்தின் உண்மையான சக்தி நமக்கு புரிவதேயில்லை. எல்லையற்ற ஆற்றல் படைத்தது நமது ஆழ்மனம். அதனால் எதையும் சிந்திக்க முடியும், நினைத்த மாத்திரத்தில் அதை விரிக்க முடியும். அதன் கற்பனை சக்தி அவ்வளவு பெரிய படைப்பாற்றல் கொண்டது. அதனால் தான் உலகின் மிக சிறந்த விஞ்ஞானி எனக் கருதப்படும் ஆல்பர்ட் ஐன்ஸ்டின், “அறிந்ததை விட கற்பனை திறனே மேலானது. அதன் படைப்பாற்றல் சிறந்தது" என்று கூறியுள்ளார். அவரது புகழ்பெற்ற "ரிலேட்டிவிட்டி" தத்துவத்திற்கு தமது மனத்தின் கற்பனை சக்தியே துணை புரிந்தது என அவர் எப்போதும் கூறி வந்துள்ளார்.

நமது ஆழ்மனம் எல்லையற்று விரிந்து கற்பனை செய்யும் திறன் படைத்தது. அதன் கற்பனை திறனோடு சிறிது சுய புத்தியையும் உபயோகிகித்தால் நமக்கு அபரிமிதத்தின் ஆற்றல் புரிய வரும். என்னடா இவன் ஏதோ பைத்தியக்காரத்தனமாக உளறுகிறானே, சொல்லுவதே புரியவில்லையே என்று நினைக்க வேண்டாம். நீங்கள் ட்யூ

லிப் மலரை நேரில் கண்டதுண்டா? ஸ்விட்சர்லாந்து நாட்டு பனிமலைகளை நேரில் சென்று கண்டு ரசித்ததுண்டா? ஆனால் உங்கள் மனதில் ஸ்விட்சர்லாந்து என்று சொன்னவுடன் உங்களது மனம் உடனே எதை படம் பிடித்து காட்டுகிறது. அது எண்ணத்தின் செயல். ட்யூலிப் என்றவுடன் பார்க்காத அந்த மலரை என்றோ ஏதோ டி.வி.யில் பார்த்த அந்த மலரை மலர்கள் நிறைந்த அந்த பூங்காவை அது ஏன், எப்படி அடையாளம் காட்டுகிறது? சரி மிகப் பெரிய மிருகம் என்று சொன்னவுடன் எது நம் மனதில் வருகிறது. டைனோசார் என்ன நிறம் என்றே நமக்கு தெரியாது. ஆனால் அதன் எலும்புகளை மட்டுமே வைத்துக் கொண்டு நாம் அதற்கு கற்பனை வடிவம் கொடுக்க வில்லையா? மனதின் உண்மையான ஆற்றல் எல்லையற்றது. அதை சிறிது லாஜிக்கோடு பயன்படுத்தினால் நமக்கு விஷயம் பிடிபடும்.

சரி. செய்முறையிலேயே இன்னும் தெளிவாக விளக்குகிறேன். நமக்கு கடவுள் என்று ஒரு விஷயம் போதிக்கப்பட்டுள்ளது. அருவமாகவும் (ரூபமில்லாததாகவும்), பல்வேறு உருவமகாவும் நாம் கடவுளை வழிபட்டு வருகிறோம். சற்று ஆழமாக யோசித்து பார்ப்போம். எதை கடவுள் என பல்வேறு மதத்தினரும் வழங்குகிறோம். படைத்தல் என்ற ஒன்றை செய்தவனை கடவுள் என்கிறோம். அது ஆணா, பெண்ணா என்று பாகுபாடு பார்க்காமல் அதனை ஆணாக பாவித்தும், பெண்ணாக பாவித்தும் நாம் தொன்று தொட்டு வணங்கி வருகிறோம். நம்பிக்கை எதுவாயினும் நமக்கு அப்பாற்பட்டு ஒரு சக்தி இருக்கிறது என்பதை நாம் மறுக்காமல் ஒப்புகொள்கிறோம். நமக்கு நல்லது நடந்தால் கடவுளுக்கு நன்றி சொல்கிறோம். துன்பம் எதேனும் நேர்ந்து விட்டால் உடனே அதே கடவுளை பழிக்கிறோம். அந்த கடவுள் என்பது யார்? அந்த இறை நிலை என்பது என்ன?

இதை சற்று விஞ்ஞான பூர்வ அணுகுமுறையோடு கையாளுவோமே.
சரி கண்களை மூடிக்கொண்டு நமது மனம் என்னும் கற்பனை குதிரையில் ஏறிக் கொள்வோம். கண்களை மூடிக் கொண்டு நான் கீழ் கூறும் விஷயங்களை அப்ப டியே மனதில் படங்களாக ஓட்டி பார்க்கவும். மெதுவாக நிதானமாக செய்தால் போதும். உங்களுக்கு புரிதல் ஏற் படும் அளவிற்கு வேகம் இருந்தால் போதும்.

1. கண்களை மூடிக் கொள்ளவும்
2. மனதை அமைதிப்படுத்தி கொள்ளவும். வேறு எந்த சிந்தனையும் வேண்டாம். நாம் இப்போது வானில் சஞ்சரிக்க போகிறோம்.
3. மனம் விரித்து நீங்கள் ஒரு ராக்கெட் டில் பயணம் செய்வதாக கற்பனை செய்து கொள்ளவும்.
4. பூமியில் இருந்து நீங்கள் செல்லும் ராக்கெட் புறப்படுகிறது. விண்ணை நோக்கி பறக்கின் றது.
5. வளிமண்டலம் தாண்டுகிறோம்.
6. மிகுந்த வேகத்தில் செல்லும் ராக்கெட் எளி தில் நிலா அருகில் சென்றடைகிறது. அங்கி ருந்து நமது நீல நிற பூமி மிக அழகாக தெரிகி றது.
7. அங்கிருந்து மேலும் பறக்கிறோம். அதோ நமது சூரிய குடும்பத்தை சேர்ந்த அத்தனை கிரகங்களும் கண்ணுக்கு தெரிகிறது.
8. அவற்றையெல்லாம் தாண்டி பறக்கிறோம். ராக்கெட் பல ஒளியாண்டுகள் வேகத்தில் பறக்கிறது. இந்த ராக்கெட்டில் ஒரு சிறப்பு என்னவென்றால் ஐன்ஸ்டினின் தத்துவப் படி உருவாக்கபட்ட ராக்கெட் இது. அத னால் இது பல ஒளியாண்டுகள் வேகத்தில்

பயணித்தாலும் நமக்கு பேருந்தில் பயணம் செய்வது போலதான் இருக்கும். வெளியில் ஜன்னலோரத்தில் இருப்பது எல்லாம் நன் றாக தெளிவாக தெரியும். அதனால் தைரி யமாக சஞ்சலம் இல்லாமல் தங்கள் ஜன்ன லோரத்தில் இருப்பதை கவனிக்கவும்.

9. இப்போது நமது ராக்கெட் நமது சூரியகு டும்பத்தை தாண்டி பறக்கிறது. அடடா எத் தனை கோடானு கோடி நட்சத்திரங்கள். எத் தனை கிரகங்கள் அங்குமிங்குமாக விண் ணில் மிதந்து கொண்டிருக்கின்றன. ஒன்றை ஒன்று வலம் வந்து கொண்டும், அசைந்தும், அசையாமலும், ஒளி வீசியும், வீசாமலும், பல்வேறு சூரிய குடும்பங்களையும் ஒரு சேர நம்மால் காண முடிகிறது.

10. அதையும் தாண்டி நமது ராக்கெட் பயணிக் கிறது. இதோ இந்த கிரக கூட்டங்களின் எல் லைக்கே வந்து விட்டோம். இவையெல்லாம் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன. ஒன்றின் ஒளியை மற்றொன்று பிரதிபலிக்கின்றன. எதோ ஒரு உந்து சக்தியால் இயங்குகின்றன. இதைத்தான் பௌதீகத்தில் நாம் முதல் தத் துவம் எனப்படும் விசை அல்லது Force என் கிறோம். இந்த உந்துதலுக்கு தேவையானது ஒரு சக்தி. இதை Energy என்கிறோம். இந்த எனர்ஜி அல்லது சக்தி இதையெல்லாம் இயக்குவதால், அதாவது இந்த கிரக கூட் டங்களையும், எரிகற்களையும், விண்மீண் என சொல்லபடும் நட்சத்திரங்களையும் மற் றும் ஏனைய விண் சார்ந்த பொருள்களை யும் இயக்குவதால் இதனை சக்தி மண்டலம் என நம் முன்னோர்கள் வகுத்தனர்.

11. சரி. நாம் நமது ராக்கெட்டில் அதையெல் லாம் தாண்டி பயணிக்கிறோம். ஒளி வீசும் சக்தி மண்டலம் சிறிது சிறிதாக அளவில் குறைந்து ஒரு புள்ளியாக மாறி மறைந்தே போய்விடுகிறது. அல்லவா. அதை தாண்டி என்ன இருக்கிறது என்பதை பார்க்கிறோம். எங்கு பார்த்தாலும் கும்மிருட்டு. ஆமாம் தானே? எதையும் நம்மால் பார்க்க முடிய வில்லை.
12. நன்றாக என்ன இருக்கிறது என்று பாருங் கள்....

இந்த இடத்தை தான் அறிவியல் அறிஞர்கள் Dark Matter என்று அழைக்கின்றனர். ஆன்ம அறிவு நிறைந்த நம் முன்னோர்கள் வைத்த பெயரோ "பிரம்மம்", "எல் லையில்லாத பரம்பொருள்", "இறைநிலை", "வற்றாயி ருப்பு", "ஆதியந்தம் இல்லாதது" எனப் பல. பைபிளும் ஆதி கடவுளை "உருவமில்லாத அருவாமாகவே" சித்த ரித்து உள்ளது. பழைய ஏற்பாட்டில் இதனை காணமுடி யும். திருகுர்ஆனும் அப்படியே அல்லாஹ்வை எடுத்து ரைக்கிறது. எனவே எல்லா இறைதத்துவங்களும் ஒரே விஷயத்தை தான் எடுத்துரைக்கின்றன. இன்று அறி வியல் அறிஞர்கள் அறிவியல் சாதனங்கள் கொண்டு காண்பதை அன்று இந்த மந்த வர்க்கத்தின் முன்னோர் கள் மனத்தின் அளப்பற்கறிய சக்தி கொண்டு கண்டு விட்டனர். இன்று அவர்கள் சொல்வதைத்தான் அறிவி யல் ஊர்ஜிதப்படுத்தவும் அதையே அறிவியல் உண்மை என பறைசாற்றவும் எத்தனிக்கிறது.

சரி இப்போது உங்களுக்கு சில கேள்விகள்

- நமது உலகம் எனும் இந்த பூமி கிரகமும், மற்றும் நாம் கண்ட அனைத்து கிரகங்களும்

எதன் மேல் சுழன்று கொண்டு இருக்கின்றன?

- அதன் அடிப்படை என்ன? எது அதை தாங்கி பிடித்து கொண்டு இருக்கிறது?
- அறிவியலின் அடிப்படையில் அது ஈர்ப்பு விசையால் சுற்றுகிறது என்றால் எல்லா கிரகங்களும் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்ளவில்லையே ஏன்?
- நாம் சக்தி மண்டலத்தை தாண்டி கண்டது கும்மிருட்டு என்றால் இந்த ஒளி பொருந்திய சக்தி மண்டலம் எங்கிருந்து வந்தது? இதன் படைப்பு ரகசியம் என்ன?
- எந்த மூலத்தில் இருந்து இவை வந்திருக்க கூடும்?

நிச்சயம் இத்தனை படைப்புக்களும் ஒரு மூலத்தில் இருந்து தானே வந்திருக்க முடியும். இந்த மூலத்தை தான் நாம் இறை நிலை என்று சொல்கிறோம். இந்த மூலத்தின் ஆற்றல்தான் எங்கும் நிறைந்துள்ளது. இதற்கு எல்லையில்லாததால் இது எங்கும் நிறைந்து அபரிமிதமாக இருக்கிறது என்று பொருள் கொள்ளலாம். நாம் வசிக்கும் கிரகமே அந்த மூலத்தில் இருந்து வந்திருக்குமேயானால், நாமும் நமது படைப்பும் அங்கிருந்து தானே ஏற்பட்டிருக்க கூடும்? அந்த எல்லையில்லா பேராற்றலின் ஒரு சிறிய படைப்பு துளியை நாமும் கொண்டுள்ளோம் என்பது புலப்படுகிறதா இப்போது?

ஆம். எங்கும் நிறைந்த அந்த எல்லையில்லா பிரபஞ்ச பேரியக்க பேராற்றல் தான் அந்த மூல சக்தி. அது அபரிமிதமாக எங்கும் இயங்குகிறது. நம்முள்ளும் இயங்குகிறது. நம்மையும் இயக்குகிறது. அந்த எல்லையில்லாததோடு உறவாடும் நமக்குள் குறைபாடுள்ள குறுகிய மனப்பான்மை ஏன் வருகிறது? இந்த தொடர்பை அதன்

உண்மை நிலையை விளங்கி கொள்ள முடியாததால் தான்.

வாருங்கள் இன்னும் தெளிவாக இந்த அபரிமிதத்தை புரிந்து கொள்வோம்.

# காந்த அலை கொள்கையும் குவாண்டம் தத்துவமும்

இன்றைய அறிவியலின் வளர்ச்சி எல்லாவற்றையும் பிரித்து பார்த்து மேய்ந்து விடும் அளவிற்கு உள்ளது. நவீன அறிவியலும் விஞ்ஞானி ஐன்ஸ்டின் நம் உலகுக்கு தந்த சார்பியல் கோட்பாடும் (Theory of Relativity) இன்று இயற்பியலின் புதிய பிரிவான குவாண்டம் அறிவியலுக்கு வழி வகுத்துள்ளது. குவாண்டம் அறிவியலின் தத்துவப்படி

"இந்த பிரபஞ்சத்தில் எல்லாமும் ஒரு அதிர்வலைகளாகத்(Frequencies) தான் செயல்படுகின்றன. ஒருவரோ அல்லது எதேனும் ஒரு விஷயமோ ஒரு அலைவரிசைக்குத் தகுந்தாற் போல் மாற்றிக்கொள்ளும் போது அந்த அதிர்வலை நமக்கு இணங்க அரம்பிக்கிறது"

ரேடியோ முதற்கொண்டு இன்றைய மொபைல் ஃபோன் கள் வரை இந்த தத்துவத்தில் தான் செயல்படுகின்றன. விண்ணில் ஏவப்படும் செயற்கைக் கோள்களும் இந்த தத்துவத்தில் செயல்பட்டுதான் வெளியில் எந்த கிரகத் தில் இருந்தும் நமது பூமிக்கு தகவல்களை அனுப்புகின் றன.

ஆனால் இந்த தத்துவம் ஏதோ அறிவியல் சார்ந்த விஷ யங்களுக்கு மட்டும் தான் என்று நினைத்து கொள்ள வேண்டாம். இந்த தத்துவம் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து விஷயங்களுக்கும் பொருந்தும். எண்ணங்க ளும் அதிர்வலைகள் தாம். நமது செயல்களும் அதிர் வலைகளாகவே கணக்கிட படுகின்றன. எனவே தான் நம்மை சுற்றி சந்தோஷமான சூழல் அமையும் போது நாமும் சந்தோஷமாக மாறிவிடுகின்றோம். அல்லது அந்த அதிர்வுகளுக்கு நம்மால் ஈடு கொடுக்க முடிய வில்லை என்றால் அங்கு இருந்து விலகி விடுகிறோம்.

நான் தத்துவ ஞானி வேதாத்திரி மகரிஷியின் மனவ ளக்கலை படித்து கொண்டிருக்கும் போது அவருடைய வான்காந்த தத்துவமும் ஜீவகாந்த தத்துவமும் என்னை வெகுவாக கவர்ந்தது. அதில் இருக்கும் இறை சார்ந்த அறிவியல் உண்மைகள் இந்த மனித இனத்திற்கு முழு வதும் தெரிய வரும் போது வாழ்வு எவ்வளவு சுகமாக இருக்கும் என்று நான் எப்போதும் எண்ணியதுண்டு. அவரது காந்த அலைக் கொள்கையும் குவாண்டம் தத் துவமும் முழுமையாக ஒத்து போகும்.

நாம் முன்பு அபரிமிதம் என்பது ஒரு வகை நுண் ஆற்றல் என்பதை கண்டோம். குவாண்டம் இயற்பியல் தத்துவப் படி எவ்வகை ஆற்றலும் ஒரு விதமான அதிர்வலையே. காந்தங்கள் அதிர்வலைகளின் தத்துவப்படி தான் இயங் குகின்றன. அதாவது ஆற்றல் அலைகளும், காந்த அலைகளும் சேர்ந்து இயங்குவதற்கு எலக்ட்ரோ மேக்

னடிக் ஃப்ரீக்வன்சீஸ் (Electro Magnetic Frequencies) என்று பெயரிட்டுள்ளனர். இதே தத்துவத்தின் அடிப்ப டையில் தான் வான் காந்தமும், ஜீவ காந்தமும் இயங்கு கிறது.

அதாவது நமது பரு உடலானது காந்தங்களில் உள் ளது போன்று ஒவ்வொரு செல்களிலும் துருவங்கள் அல்லது காந்த முனைகள் கொண்டுள்ளது. அறிவியல் அறிஞர்கள் ஒத்து கொண்டுள்ள விஷயம் இது. அதே போல் இப்பிரபஞ்சத்தில் எங்கும் நிறைந்துள்ள வெளி யானது தனது அதிர்வலைகளை வான் காந்த சக்தியாக வெளிப்படுத்துகிறது. நாம் வாழ்வதற்கு தேவையான அளவு உடலில் ஜீவகாந்த சக்தி நிறைவாக அளிக்கப் பட்டுள்ளது. அது நமது உடல், மனம், ஆன்மா இவை மூன்றும் சரியாக செயல்பட உதவுகிறது. நாம் ஏற்கனவே கண்ட அபரிமிதக் கொள்கை படி எல்லாமும் நாம் கண்ட அந்த எல்லையில்லா பரவெளியில் இருந்து தான் வந்தி ருக்கிறது என்றால், நாமும் நமது பரு உடலை இயக்கிக் கொண்டிருக்கும் ஜீவகாந்த அலைகளும் அங்கிருந்து தானே வந்திருக்க வேண்டும்? எனவே நமது உடலில் உள்ள ஜீவ காந்த அலைகளுக்கும், வான் காந்தத்திற் கும் எப்போதும் தொடர்பு இருந்து கொண்டே வருகிறது. நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் முதலில் நம்மை சுற் றியுள்ள ஜீவகாந்த அலைச்சுழலை முதலில் தாக்கி பின் ஜீவகாந்த அலைகளை தாக்கும். நாம் ”எண்ண அலை கள் தாக்கியது” என்ற வாக்கியத்தை கேட்டிருக்கலாம். அது உண்மையில் இப்படி அதிர்வலைகளாக செயல்ப டுவதுதான் காரணம்.

இயற்கை தன்னுள்ளே மிகப் பெரிய ரகசியங்களை உள் ளடக்கியது. அதில் ஒன்றுதான் இந்த காந்த அலை தத் துவம். இயற்பியல் அடிப்படையில் ஒரு “அலை” க்கு கீழ் கண்ட குணங்கள் உண்டு.

- மோதுதல்
- பிரதிபலித்தல்
- விலகுதல்
- ஊடுருவதல்
- தொடர்பு கொள்ளுதல்

இதன் படியே பார்ப்போமேயானால் ஒரு எண்ண அலை ஜீவகாந்த சுழலில் விழும் போது அது ஜீவகாந்த அலை யாக மாற்றம் பெற்று மேற்கண்ட அனைத்து குணங் கள் கொண்டும் திரிபு பெறுகிறது. ஏற்கனவே ஜீவ காந்தத்திற்கும் வான் காந்தத்திற்கும் எப்போதும் நிலவி வரும் தொடர்பு பற்றி கண்டோம். ஆக இந்த எண்ண அலை ஜீவகாந்த மையத்திலிருந்து வான்காந்தத்தோடு தொடர்பு கொள்கிறது. அப்படி தொடர்பு கொள்ளும் போது பலவிதமான ரூபங்களாக, செயல்களாக, பலன் களாக உருப்பெறுகிறது. பிரபஞ்சத்தில் எல்லாமும் அப ரிமிதமாக இருப்பதால் எந்த எண்ண அலையை நாம் எப்படி வெளியிடுகிறோமோ அதற்கு தகுந்தாற்போல் நமக்கு எதிர்வினைகள் அமைகின்றன. எனவே தான் எப்போதும் நாம் நல்லதையே நினைக்க வேண்டும் நல் லதே நடக்கும் என்று நம் பெரியவர்கள் கூறுகிறார்கள். அதன் அடிப்படைத் தத்துவம் இதுவே.

எண்ணம் எவ்வாறாக இருப்பினும் அதற்கு தகுந்தாற் போல் பலனைத் தர இப்பிரபஞ்சம் எப்போதும் தயாராக இருக்கிறது. ஏனெனில் அது அள்ள அள்ள குறை யாத வற்றாத தன்மை கொண்டது. எண்ணம் பணத் தின் மீது மோகம் வைத்தால் அந்த அதிர்வலைகள் காரணமாக, குறிப்பாக அந்த அலைவரிசையோடு நாம் சரியாக ஒத்திசைத்து (tuning) கொண்டால் பிரபஞ்சம் பணத்தை எடுத்து கொண்டு வந்து தருகிறது. நாம் எப் போதும் கவலை எனும் எண்ண அலையை வெளியிட் டால் அதற்கேற்றாற் போல் பிரபஞ்சம் அபரிமித நியதி படி

மேலும் கவலை நிறைந்த சூழ்நிலைகளை நமக்கு ஏற்ப டுத்தி தருகிறது. அதைத்தான் "பட்ட காலிலேயே படும்" என்று சொல்வார்கள்.

ஆக நன்மையோ தீமையோ அது நம் எண்ண அலைக ளால் தான் ஏற்படுகிறது. எது கொடுத்தாலும் அது அந்த பிரபஞ்சத்தின் அபரிமிதத்தில் இருந்து நம்மால் திரும்ப பெறப்படுகிறது. அதனால் நம் சூழ்நிலைகளை உரு வாக்குவது நாமே என்பது புரியும். ஆக அள்ள அள்ள குறையாத அபரிமித பிரபஞ்சத்தில் இருந்து எதை நாம் எடுத்து கொள்ள வேண்டும் என்று நாம் தான் தீர்மா னிக்க வேண்டும். குறுகிய மனப்பான்மையோடு கவலை எண்ணங்களையும் எண்ணிலடங்கா புகார்களையும் நாம் தெரிவிக்கும் போது, எண்ண அலைகளாக நாம் வெளியிடும் போது அதுவே நம் வாழ்க்கையை குறுகிய தாக மேலும் பிரச்சினைக்குரியதாக ஆக்க காரணமாக அமைந்து விடுகிறது.
மனதின் ஆற்றல் மிகு சக்தியால் நம்மால் அரசனாகவும் முடியும், ஆண்டியாகவும் முடியும். சரியாக அறிவியல் பூர் வமாக அபரிமிதத்தின் கொள்கைகள் எப்படி செயல்ப டுகிறது என்று நாம் புரிந்து கொண்டோமேயானால் நம் வாழ்க்கையை சிறப்பானதாக மாற்றி கொள்ள முடியும்.
எண்ண அலைகளை சரி செய்து குறுகிய மனப்பான் மையை ஒழித்து எப்படி பிரபஞ்சத்தின் அபரிமித ஆற்ற லால் வளம் பெறுவது எப்படி?

# வான்காந்தமும் ஜீவகாந்தமும்

இறைநிலையிலிருந்து பிரபஞ்சம் தோன்றியது என்ற கருத்து பொதுவாக இருந்து வருகிறது. இந்த கருத்து சிறிது உண்மை போன்று தோன்றினாலும் இன்றைய ஆன்மீக அறிவு சார்ந்த எல்லா வழுக்கல்களுக்கும் காரணம். உண்மையில் இறைநிலையே பிரபஞ்சமாக தன்மாற்றம் அடைந்து இயங்கி கொண்டிருக்கிறது. இறைநிலை வேறாகவும், பிரபஞ்சத்தில் தோற்றம் பெற்றிருக்கும் பொருட்கள் வேறாகவும் இருக்கின்றன என்னும் தவறான கருத்தே இன்றைய சூழ்நிலையில் நிலவி வருகிறது. எந்த ஒரு தோற்றமும், நிகழ்ச்சியும் அந்த இறைநிலையின் வற்றா யிருப்பிலிருந்தே அபரிமிதத்தின் ஆற்றலால் உருவான ஒரு பகுதியாகும். எல்லாம் அந்த முழுமையின் ஒரு பகுதியே.

உயிரின பரிணாமத்தில் பரிணமித்து வளர்ந்த உயிர்-சக்திக்கு இரண்டு சிறப்பான குணாதிசயங்கள் தொன்று தொட்டு இருப்பதை நம்மால் காண முடியும்.

1. தன்னைத் தானே சூழ்ந்து சுழலும் ஆற்றல்.
2. அறிவு நிலையாக தன்மாற்றம் பெற்று செயல் படும் திறன்.

இவற்றை பற்றி முழுமையாக விளக்க வேறு ஒரு தனி புத்தகமே எழுத வேண்டியது இருக்கும். அதை சிறப்பாக திரு வேதாத்திரி மகரிஷியின் புத்தகங்கள் விளக்கும். எனினும் ரத்தின சுருக்கமாக இங்கு சொல்கிறேன்.

பிரபஞ்ச பேரியக்க மண்டலத்திலே முதல் பொருளாக நாம் கண்டது அனைத்தியக்க அபரிமித ஆற்றலாக இருக்கும் இறைவெளி. அதை நாம் நம் சுய விளக் கம் மூலம் முன்பே கண்டோம். அந்த சுத்த வெளியில் இருந்து தோன்றியதுதான் எல்லாமுமே என்றும் கண் டோம். இப்போது ஒரு கேள்வி நமது மனதில் எழும். ஒன்றுமே இல்லாத நிலையில் இருந்து எப்படி எல்லா மும் தோன்றியிருக்க முடியும்? இதை உலக வழக்க மொழியில் மில்லியன் டாலர் கேள்வி என்பார்கள். அப் படியென்றால் இன்னும் தெளிவிக்க முடியாத பதிலை உடைய, அல்லது இதுவரை சரியான பதிலே கிட்டாத கேள்வி என வைத்துக் கொள்ளலாம். இதை ஆங்கிலத் தில் எக்ஸ்-நிஹிலோ (Ex-nilhilo) என்கிறார்கள். அதா வது ஒன்றுமே இல்லாததில் இருந்து எல்லாம் படைக் கப்பட்டது என்று அதற்கு அர்த்தம்.

ஆனால் அதே நேரத்தில் எல்லாம் தோன்றியிருக்கிறது என்பது உண்மை. அப்போது ஏதாவது ஒன்று இவை யெல்லாம் தோன்ற காரணமாக இருக்க வேண்டும் அல் லவா? இதை ஜென் தத்துவஞானிகள் "ஒன்றுமேயில் லாதது தான் எல்லாம்" என்று விளக்குகின்றனர். நாம் எளிதில் புரிந்து கொள்ளும் விதத்தில் அதை நமது சாமன்ய அறிவிற்கு எட்டாத ஆனால் நுண்ணிய அறிவு கொண்டு உணர்ந்தால் புரிந்து கொள்ள கூடிய தத்து

வமே என்பது தெளிவாகும். சகல உயிரின பரிணாமத் திற்கும் காரணமான அந்த தன்மையே விண் துகள் அல்லது இறைத்துகள் என்று நாம் அழைக்கிறோம். இவை ஒன்றுமல்லாத நிலைவெளியால் சூழ்ந்தழுத்த பெற்று தற்சுழற்சி பெறுகிறது.

உதாரணத்திற்கு எதேனும் ஒரு பொருளை பாட்டிலில் அடைத்து வைத்து அதை நாலாபக்கத்திலும் காற்றை செலுத்தினால் அது சுழல ஆரம்பிக்கும். இங்கு காற்றை நாம் ஒரு விதமான விசையாகவே எடுத்து கொள்ள வேண்டும். ஒரு பஞ்சபூத பொருளாக அல்ல. காற்றின் மூலம் ஏற்படும் விசையாற்றலால் அந்த பொருள் தன் னைத்தானே சுற்ற ஆரம்பிக்கும். அது போலவே தான் இந்த நுண்ணிய விண் துகளும்.

இப்படி சுழலும் இந்த துகளானது முறையே காந்த மாக தன்மாற்றம் அடைந்து, பஞ்சபூதங்களாக (Five Elements) மாறி, திட, திரவ, உயிரின பொருள்களாக பரிணமிக்கின்றது. இப்படி பார்க்கும் போது உயிரினங்க ளின் வரிசையில் மேல்தட்டில் நிற்கும் நாம் நிலைவெ ளியில் இருந்து தன்மாற்றம் பெற்றிருக்கும் பஞ்சபூதங் களின் கூட்டுக் கலவை எனவும், வான் காந்தத்தாலும், உடலில் ஓடும் ஜீவகாந்தத்தாலும் இயக்கப் படுகிறோம் என்பதும் தெள்ளத் தெளிவாக புரியும்.

மனிதன் எனப்படும் நாம் கீழ்கண்ட நான்கு விஷயங்க ளின் கூட்டு கலவையாகும்

1. பருஉடல்.
2. மனம்
3. உயிர் சக்தி அல்லது ஆன்மா
4. ஜீவகாந்தம்

நம் உடல் இயங்க காரணமான உயிர் சக்தி பிரபஞ் சத்தில் உள்ள மூலசக்தியோடு ஒத்திசைந்து இயங்கும்

போது, அது தற்சுழற்சி பெற்று ஒரு காந்த அலையை ஏற் படுத்துகிறது. உடலின் ஒரு எல்லை வரை அது உடல் இயங்க காரணமான அது ஜீவகாந்தம் என அழைக்க பெறுகிறது. வெளியில் இருக்கும் வான்காந்தத்தோடு முறையே அதன் அலைவரிசைகளில் ஒத்திசையும் போது பொதுவான காந்தத்திற்கே உரிய தன்மையோடு, ஈர்ப்பதும், விலகுவதும் ஏற்படுகிறது. இதன் காரணமா கவே செயல் விளைவுகள் எல்லா விதத்திலும் இப்பிர பஞ்சத்தில் ஏற்படுகின்றன.

தன்னைத் தானே சூழ்ந்தழுத்தும் ஆற்றலால் இந்த காந்த அதிர்வலைகள் ஏற்படுகிறது. ஆனால் அதே நேரத்தில் அது அறிவுநிலையாக திரிபு பெறும் போது தான் சிக்கலே ஏற்படுகிறது. அறிவு நிலையில் தான் எண்ணங்கள் ஏற்படுகின்றன. அறிவு நிலையில் ஏற்ப டும் எண்ண அதிர்வுகளுக்கு தகுந்தாற்போல் செயல் விளைவு நேரெதிராகவும் அமைகிறது, நமக்கு சாதகமா கவும் அமைகிறது.

# நாம் விரும்புவனவற்றை அபரிதமான எல்லையற்ற இறைவெளியில் இருந்து பெற

இந்த பிரபஞ்சம் எல்லையற்று அபரிமிதமாக இருப்பதை கண்டோம். அந்த அபரிமிதததில் இருந்து நமக்கு வேண்டுவனவற்றை பெற எப்படி பிரபஞ்ச விதிகள் துணை புரிகின்றன என்ப தையும் பார்த்தோம். நாம் விரும்புவது நமக்கு கிடைக்க கீழ்க்கண்ட ஐந்து காரணிகள் தான் காரணம். அதா வது நமது எண்ணம் எப்படி செயலாக பரிணமிக்கிறது

என்பது இந்த ஐந்து விஷயங்களை புரிந்து கொண்டால் தெளிவாகிவிடும்.

- ஆசை (காரணம்)
- தேடல்
- அர்ப்பணிப்புடன் கூடிய ஈடுபாடு
- ஈர்ப்பு
- விளைவு (காரியம்)

இதை இன்னும் விளக்கமாக பார்ப்போம்.

நம்முடைய தேவை, ஆசை எனும் எண்ண அலைகளாக வெளிப்படுகிறது. அதை ஆசை, விருப்பம் என எப்படி வேண்டுமானாலும் பொருள் கொள்ளலாம். இந்த எண்ண அலைகள் அதன் வலிமையை பொறுத்து ஒரு தேடலை தன்னால் ஏற்படுத்துகிறது. இதுதான் முதல் விளைவு. காரண காரிய தத்துவப் படி ஒரு காரியம் நடக்க காரணம் என்று எதாவது ஒன்று இருக்க வேண்டும். இங்கு நம் விருப்பமே காரணம். எனவே அதற்கு விளைவு நிச்சயம் உண்டு. அந்த விளைவு நமக்கு ஏற்ப வாறு அமையவே இந்த தேடல் அமைகிறது. நமது எண்ணம் அல்லது விருப்பம் உண்மையானதாக இருந்தால் இந்த தேடல் தீவிரமானதாக தன்னால் அமைந்து விடும். அதை நமக்கே தெரியாமல் நமது மனம் தீவிரப்படுத்தி விடும்.

நமது தேடலின் தீவிரம் தன்னால் நம்மை அதில் அர்ப் பணித்து ஈடுபட வைத்து விடும். இப்படி நடக்கும் பொது இந்த எண்ண அலைகள் முன்பே தெரிவித் தது போன்று தீவிரமாக எல்லையற்ற பிரபஞ்ச ஆற்றலில் சென்றடைந்து வான்காந்த புலத்தை சென்றடைகிறது. நமது எண்ணம் காரணமாக இருப்பதால் இதற்கான விளைவை ஏற்படுத்த வேண்டிய கட்டாயம் பிரபஞ் சத்திற்கு. இல்லையென்றால் காரண காரிய தத்துவம்,

செயல் விளைவு நியதி பொய்யாகிவிடும். நாம் புராணங் களில் இதை கண்டதுண்டு எத்தனையோ வருடங்கள் தவம் இருக்கும் அசுரனுக்கும் தெய்வங்கள் தோன்றி "வேண்டும் வரம் கேள்" என்று சொல்லும். அந்த அசுரர் கள் போலும் தவத்தின் தீவிரத்தை தனது எண்ணத்தின் வெளிப்பாடை காட்டியது அவர்களுக்கு வேண்டுவ னற்றை பெற்று தரும். அவர்கள் எண்ண கேட்கிறார்கள் அதன் மூலம் என்ன பிறகு நடைபெறும் என்பதெல்லாம் பிறகு. மனத்தின் சக்தி அப்படி. ஆக பிரபஞ்சம் ஏதாவது செய்தே ஆக வேண்டும் என்ற கட்டாயத்தில் நாம் கேட் டவற்றை எப்படி கொடுப்பது என்று சிந்திக்க ஆரம்பிக் கும்.

முதல் கட்டமாக இந்த கோரிக்கை எல்லா விதத்திலும் பிரபஞ்ச விதிகளுக்கு ஒத்து போகின்றனவா என்று சரி பார்க்கும். ஜீவ காந்த புலத்திலும், வான் காந்த புலத் திலும் இந்த நேரத்தில் ஒரு ஈர்ப்பு ஏற்படுகிறது. உண் மையில் சொல்ல போனால் நம் எண்ணம் அதை ஈர்க் கிறது. அதாவது நமக்கு வேண்டும் அந்த ஒன்றை நமது தீவிரத்தால் நாம் ஈர்க்கிறோம். தனது அட்டவணையில் எல்லாம் சரி பார்த்தபின் நமது எண்ணம் என்ற காரணத் தின் விளைவாக நாம் கேட்டதை நமக்கு அபரிமிதத்தின் ஊற்றில் இருந்து எடுத்து கொடுக்கிறது. நாம் கேட்டது கிடைக்கிறது.

சரி. அது எண்ண கணக்கு என்று கேட்கிறீர்களா? பிர பஞ்ச விதிகள் புரியாத சில பேர் அதற்கு நல்லது கேட் டது எல்லாம் தெரியாது என்பர். நல்லது கேட்டது என் பது உண்மையில் மாறுபடும் ஒரு விஷயம் தான் என்றா லும், எல்லாவற்றையும் தாண்டிய இறை நிலையில் ஆதி யில் இருந்தே சில விதிகள் உள்ளன. அவை படைத் தல், காத்தல், அழித்தல் என்ற விஷயத்தை செவ்வனே செய்து வருகின்றன. அவற்றை உருவமாக சித்தரித்து தான் கடவுளர் படங்கள் உருவாக்க பட்டது. அனால்

உண்மையில் இவை மூன்றும் செய்வது அந்த "ஒன்று" எனும் இறை நிலை. அதற்கென அவையை செய்வதற் கென சில விதிகளை விதித்து வைத்துள்ளது. அதைப் பற்றி நாம் ஏற்கனவே கண்டோம். நல்லது கெட்டது என்பது நம் தராசில் தவறி போகலாம். ஆனால் அதன் கணக்கை அதன் நுட்பத்தை எளிதில் புரிந்து கொள் வது என்பது இயலாது. அதை விளக்க கோடி வார்த்தை கள் வேண்டும். ஆதியில் ஒன்றும் இல்லாத நிலையில் இருந்து தனது தெய்வீக அன்பின் காரணமாக சகலத் தையும் படைத்தது அது. பின்னர் அதை காக்க விதி களை கொண்டது. அதன் விதிப்படி நடக்காத எந்த ஒரு விஷயத்தையும் அழிக்க வல்லது அது. ஒரு சிறிய எண் ணமாகட்டும், அல்லது ஒரு மனிதனே ஆகட்டும் அந்த பிரபஞ்ச விதிகளுக்கு எதிர்மாறாக செயல் படுவார்களே யானால் அந்த அழிவு நடைபெறும். அதன் அடிப்படை யில் தான் இந்த கணக்குகள் எல்லாம்.

நிச்சயம் ஒரு கார் வாங்குவது என்பது ஒரு அநியாய ஆசை அல்ல. எவ்வளவு உயர்தரமான கார் என்றாலும் அதை மேற்கண்டவாறு செயல்படுத்தினால் கொண்டு வந்து தரும் பிரபஞ்சம். ஆனால் மற்றவர் உடைமை களை கவர வேண்டும் என்ற ஆசையுடன் இருக் கும் பலரது கோரிக்கையை பிரபஞ்சம் ஏதாவது ஒரு வகையில் நிராகரிக்கவே செய்கிறது. மீண்டும் அந்த அசுரர்கள் கதைக்கு நாம் வந்தோமேயானால், வேண் டும் வரத்தை கேள் என்று கடவுளர்கள் சொன்னாலும், அவர்கள் வாங்கிய வரமே அவர்கள் உயிர் கொள் ளும் அளவிற்கு கொண்டு போய்விடுமாறு எதாவது ஒரு விதத்தில் அவர்கள் மனம் மற்றும் செயலை சிதைத்து விடுகிறது இறைநிலை. யார் தலையில் கை வைத்தா லும் அவர்கள் பஸ்மாமாகி விட வேண்டும் என்று வரம் வாங்கும் ஒரு அசுரன், காத்தல் வேலையை செய்கிற விஷ்ணுவின் மோகினி அவதாரத்தில் மோகம் கொள்

கிறான். நடனமாடும் போது தன் தலையில் தானே கை வைக்கிறான். அவனே பஸ்மமாகிறான்.

இந்த கதையை நன்றாக கவனித்தால் இங்கு காத்தல் செய்யும் அதே தெய்வம் அழித்தல் வேலையை செய்ய வும் செய்கிறார். அங்கே அதுவும் நடைபெறுகிறது. காத் தல் அந்த விதிகளின் அடிப்படையிலேயே நடைபெறுகி றது. அதில் ஏதேனும் ஊரு வரும் போது அதை களைய முற்படுகிறது. அந்த அசுரனது கதையில் அது அவனது பலவீனமாந மோகத்தில் இருந்து முளைக்கிறது.

சிலர் குறுகிய மனப்பான்மையுடன் மற்றவர்களை ஒப் பிட்டு அவர்கள் எவ்வளவு கெட்டவர்கள் ஆனால் அவர் களுக்கு எல்லாம் சரியாக நடக்கிறதே. நான் ஒரு பாவ மும் செய்யாதவன்(ள்) எனக்கு மட்டும் எல்லாம் எதிர்ம றையாக நடக்கிறதே என்று பெருமூச்சு விடுவர். அவர்க ளுக்கு இந்த அசுரர்களின் கதையை தெரிவிக்கவும்.
இதைத்தான் நம் பெரியவர்கள் "அரசன் அன்று கொள் வான். தெய்வம் நின்று கொல்லும்" என்று தெரிவித்து உள்ளனர்.

அனைத்து பிரபஞ்ச விதிகளும் உணர்வு பூர்வமாக செயல்படுவதால் ஒப்பீடுகளால் ஏற்படும் மனகசப்பு கூட நமக்கு கிடைக்க வேண்டியவற்றை கிடைக்க விடா மல் செய்து விடும். எனவே அபரிமிதத்தின் ஆற் றலை அதற்கே உரிய தன்மையோடு அதன் விதிக ளோடு அதற்கே உரிய அலைவரிசையில் ஒத்திசைந்து தொடர்பு கொண்டால் நமக்கு வேண்டும் எல்லாம் கிடைக்கும் என்பது திண்ணம்.

நமக்கு வேண்டுவன எல்லாம் அந்த அபரிமிதத்தில் இருந்து கிடைக்கும் எனத் தெரிந்த பிறகு நமக்கு ஏன் இன்னும் அந்த குறுகிய மனப்பான்மை?

# அபரிமிதமும் பிரபஞ்ச விதிகளும்

பிரபஞ்சம் உருவான நாள் முதலே அது அபரிமித ஆற்றலோடுதான் செயல்பட்டு கொண்டு இருக்கிறது. அது எல்லாம் சரியாக சிறப்பாக செயல்பட தனக்குத் தானே சில நியதிகளை வகுத்து வைத்துள்ளது. இந்த நியதிகள் அனைத்தும் தானே உருவானவை. இந்த நியதிகளின் அடிப்படையில் தான் பூமி சுற்றும் நேரம், சூரியன் உதிக்கும் நேரம், ஜனன மரண அடிப்படைகள், ஒரு பூவுக்கு இத்தனை இதழ்கள், அதுவும் ஒரு மலரோ பழமோ இந்த மாதிரிதான் இருக்க வேண்டும் என்ற நியதிகள், என்பது போன்ற அடிப்படையில் எல்லா விஷயங்களும் படைக்கப்பட்டன, அதே விதத்தில் செயல்படுகின்றன.

"இந்த ரோஜா பூவுக்கு ஏன் இந்த நிறம்? ஏன் கடவுள் வேறு நிறம் கொடுக்கவில்லை?" என்பது போல கேள்விகளை கேட்காத மனித மனது இருக்கவே முடியாது. உண்மையில் பனிகட்டிகளின் கட்டமைப்பு, இயற்கையில் தேனீக்களால் கட்டப்படும் தேன் கூடு, வரிப்புலிகளில் இருக்கும் கம்பீர வரிகளின் அமைப்பு போன்

றவையெல்லாம் நமக்கு எப்போதும் ஆச்சரியத்தையும் பிரமிப்பையும் ஏற்படுத்துவதுண்டு. காற்று காரணமாக நடக்கும் மகரந்த சேர்க்கை, அதனால் உருவாகும் மலர், அதிலிருந்து உருவாகும் காய்கள், அவை கனிந்த பின் இனிய மலர்கள் என வகுத்து வைத்தது எல்லாம் வல்ல அந்த இறை பேராற்றல் மட்டுமே. அத்தனையும் தமக் கென ஆதியிலே தானே உருவாக்கி கொண்ட விதிகள் மூலமே செயல்படுத்தி கொண்டு இருக்கிறது.

ஒன்றுமே இல்லாத தன்மையில் இருந்து இன்று இத் தனை கோடி உயிரினங்களாக, தோற்றங்களாக பரிண மித்து இயங்கிக் கொண்டு இருக்கிறது என்றால் எத் தனை கோடி மனிதர்களின் மூளையை காட்டிலும் அது மேன்மையானது என்று புரியும். ஆனால் அது புரியாத மனித மனது அதனை அடக்க முற்படுகிறது. அதே போல் படைத்து விட முடியும் என எண்ணுகி றது. தன்னை போலவே ரோபோக்களை உருவாக்கி வேடிக்கை பார்க்கிறது. சத்தியத்தில் பார்த்தால் உரு வாக்கிய ரோபோக்கள் எல்லாம் ஏதோ ஒரு குறையுட னேயே இருக்கின்றன. காரணம் நம் படைப்புக்கு கார ணமாக இருக்கும் பிரபஞ்சத்தின் நுண்ணறிவு நம்மி டையே இல்லாததுதான். மேலோட்டமாக ஏதோ காரண அறிவை வளர்த்து கொண்டு நாம் தான் சிறந்தவர்கள், மனித வர்க்கம் தான் எல்லாவற்றிலும் மென்மையான உயிரினம் என்று மார்தட்டிக் கொண்டு இருக்கிறோம். ஆனால் பிரபஞ்சத்தின் அபரிமித ஆற்றலாலும், அதன் நுண்ணிய இயக்க விதிகளாலும் தான் நாம் இயங்கி கொண்டு இருக்கிறோம், சகலமும் இயங்கி கொண்டு இருக்கிறது என்பது தான் நிதர்சனம்.

ஏராளமான பிரபஞ்ச விதிகள் இருக்கின்றன. அதில் நமது கவனத்தை ஈர்ப்பவை சில மட்டுமே. அதற் காக மற்றவை தேவையில்லை என்று அர்த்தமில்லை. நமது வாழ்க்கையை அபரிமிதத்தின் ஆற்றலை பயன்ப

டுத்தி சிறப்பாக ஆக்கிகொள்ள இந்த பிரபஞ்ச விதிகள் துணைபுரியும்.

உதாரணத்திற்கு காரண காரிய தத்துவமும், செயல் விளைவு விதியும் புரிந்து கொண்டோமென்றால் அதன் அடிப்படையில் நம் வாழ்க்கையில் எது போன்ற செயல் களை, எண்ணங்களை விதைத்தால் எது போன்ற விளைவுகள் ஏற்படும் என்று நம்மால் கணிக்க முடியும். ஆனால் இங்கேயும் இந்த பிரபஞ்சம் ஒரே ஒரு விதியின் அடிப்படையில் மட்டும் இயங்குவதில்லை ஒவ்வொரு விதியும் மற்றொன்றோடு தொடர்புடையது. நாம் அந்த மூலசக்தியோடு ஒத்திசைந்து இயங்கும் போது நாம் அதன் விதிகளுக்கு உட்பட்டு நடக்கும் சூழல் ஏற்படும்.

உதாரணத்திற்கு நமக்கு அதிகப் பணம் வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். அதிகப் பணம் எங்கி ருந்து கிடைக்கும்? உண்மையில் நமக்கு அது கவர்ன் மண்ட் அச்சடித்து புழக்கத்தில் விடப்பட்டு தான் நம் கையில் கிடைக்கும். ஆனால் அந்த பணம் என்பது ஒரு காகிதம்தான். அது நாம் செய்யும் ஏதோ ஒரு செயலுக்கு, வேலைக்கு ஈடாக கொடுக்கப்படுகிறது. இது பிரபஞ் சத்தின் கொடுத்தல் விதிப் பிரகாரம் நடப்பது. சரி யார் கொடுப்பார்கள்? அந்த செயலினால் பயன் அடைந்த வர்கள். ஊன்மையில் இது ஒரு ஓட்டம் போன்றது. பிர பஞ்சத்தின் இயக்கத்திற்கு அடிப்படையான செயல்கள் இந்த கொடுத்தல் வாங்குதல் விதியின் அடிப்படையி லேயே நடக்கிறது. உண்மையில் பணம் வேண்டும் என் கிற ஒரு எண்ணம் உருவாகி செயலில் நம்மை ஈடுபட வைக்கிறது. அப்படி ஈடுபடும் போது நாம் இந்த பிர பஞ்சத்திற்கு ஏதோ ஒரு விஷயத்தை கொடுக்கிறோம். அதன் அடிப்படையில் நமக்கு தேவையான பொருள் நமக்கு அபரிமிதத்தின் வற்றா ஊற்றிலிருந்து இருந்து கொடுக்கப் படுகிறது. அங்கிருந்து இங்கு வரும்போது

பணம் என்னும் காகிதமாக உருமாறி வருகிறது. அவ்வ ளவே.

இந்த நிகழ்வில் ஈர்ப்பு விதி, செயல் விளைவு விதி, பிரபஞ்ச பரிமாற்ற விதி, கொடுத்தல் விதி ஆகியவை சேர்ந்து செயல்படுகின்றன. இவை யாவும் முன்பே கண் டது போல மூலசக்தியோடு சரியான அலைவரிசையில் ஒத்திசையும் போது அது நமக்கு தேவையான பணமாக உருப்பெறுகிறது. ஆனால் கொடுக்கும் தெய்வம் கூரையை பிய்த்து கொண்டு கொடுப்பதில்லை. ஆகா சத்தில் இருந்து பணம் உருப்பெற்று பூமியில் இருக்கும் உங்கள் வீட்டில் உங்கள் கூரையை பிய்த்து கொண்டு கொட்டாது. ஆனால் அந்த பணம் முறையே உங்களை வந்து சேர வேண்டிய அனைத்து வழிகளையும் ஏற்ப டுத்தி பிரபஞ்சம் உங்களையும் செயல்பட வைத்திருக் கும்.

இது அபரிமிதத்தின் இருப்பிடத்தில் இருந்து வருவதால் இதற்கு எல்லையே இல்லை. பணம் போன்ற விஷயங் களுக்கு எல்லை வகுத்து கொண்டது மனித மனம் மட் டுமே. உண்மையில் இந்த எல்லையற்ற பிரபஞ்சத்தில் எதற்கும் எல்லைகள் என்பது கிடையாது. காரணம் எல் லாமே அந்த அள்ள அள்ள குறையாத அபரிமிதத்தில் இருந்து படைக்கப்படுபவைதாம்.

# அபரிமிதமும் ஈர்ப்பு விதியும்

அள்ள அள்ள குறையாத வற்றாயிருப்பிலிருந்து நமக்கு நாம் விரும்புவன கிடைக்கும் என்று கண்டோம். அது பணமாகட்டும், வேறு எதோ ஒரு பொருளாகட்டும், நமது கனவு தொழிலாகட்டும், வேலைவாய்ப்பாகட்டும், கனவு வாழ்க்கைத்துணையாகட்டும் எல்லாம் அபரிமிதத்தில் நாம் ஏற்கனவே கண்டது போல எண்ண அலைகளை வான்காந்த புலத்தில் அதன் சரியான அலைவரிசையில் செலுத்தும் போது தாமாகவே நம்மை வந்தடையும். இந்த எண்ண அலைகளை சரியான அலைவரிசையில் செலுத்தி நமக்கு வேண்டியதை பெற ஈர்ப்பு விதி (Law of Attraction) நமக்கு துணை புரிகிறது.

சமீப காலங்களில் புத்தகக் கடைகளில் கிடைக்கும் "ரகசியம்(The Secret)" இந்த ஈர்ப்பு விதியை குறித்து ஒரு மெஸ்மரிஸ ரீதியில் விளக்கினாலும், இது பண்டைய காலம் முதல் தொன்று தொட்டு இந்த உலகில் பலரால் கடை பிடிக்கப்பட்டு வரும் ஒரு வழக்கமே ஆகும். நாம் சாதாரணமாக நமது வீடுகளில் செல்வம் ஈர்க்கும் எந்தி

ரங்கள் பதித்து இருப்பதை காணமுடியும். அதில் உள்ள உண்மை தத்துவம் அது இருக்கிறதே என்ற தைரியத்தில் நம்மிடம் ஒரு நம்பிக்கை பிறக்கும். அதுவும் இல்லாமல் சிறு வயதில் இருந்தே “பணம் படைக்க” கற்று கொடுத்திருப்பார்கள். நம்மில் பலரும் வணிகர்களாக கடையில் அஷ்டலமி படத்தையும், குபேர யந்திரத்தையும் மாட்டி வைத்து, அதில் ஒரு நூறு ரூபாய் நோட்டையும் இணைத்து ஃப்ரேம் செய்து அதற்கு தினமும் காலை மாலை என பூஜை செய்து வருவதை வழக்கமாக வைத்திருப்போம். பணமும் எதிர்பார்த்த படியே வரும். இதில் உள்ள ஒரு ஆழமான தத்துவம் என்னவென்றால் நாம் கடந்த அத்தியாயங்களில் பார்த்தது போல பிரபஞ்ச விதிகளே. அதிலும் இவற்றை தினமும் செய்து வருவது மூலம், இறைவன் நம்முடன் இருக்கிறான், லக்ஷ்மி நம்மோடு குடிக் கொண்டிருக்கிறாள் என்ற ஆழ்மனதின் ஆழமான நம்பிக்கையே. இந்த ஆழமான நம்பிக்கையே சரியான அலைவரிசை எனலாம்.

இந்த சரியான அலைவரிசை நம் ஆழ்மனதில் இருந்து காந்த அலைகளாக வெளியேறி வான் காந்த புலத்தை அடைந்து நமக்கு தேவையான பணத்தை எடுத்து கொண்டு வந்து தருகிறது. இது நமது நாட்டில் இருக்கும் பழமையான ஒரு பழக்கமாகும். இதைத்தான் இன்று நாம் ஈர்ப்பு விதி என்று கொட்டி கரகோஷம் செய்கிறோம்.உண்மையில் பண்டைய இந்தியாவில் இருந்து பாபிலோனா, மற்றும் மேசபொடோமியன் நாகரீகங்களில் போலும் இந்த முறை காணப்படுகிறது. ஈர்ப்பு விதி நமக்கு பிரபஞ்சத்தில் இருந்து அதன் அபரிமிதத்தில் இருந்து நமக்கு வேண்டுவன எல்லாவற்றையும் கொண்டு வந்து தரவல்லது. அதைத்தான் இயேசுநாதர் "கேளுங்கள் கொடுக்கப்படும்" என்றார்.

பல நூற்றாண்டுகளாக மனித நாகரீகங்களில் காணப்படும் இந்த விஷயம் சமீப காலங்களில் ஆழ்மன ஆராய்ச்

சியாளர்களாலும், டாக்டர் நெப்பொலியன் ஹில், டாக்டர் எம்.ஆர்.கொப்மெயர் போன்றவர்களால் புதுமைப் படுத் தப்பட்டது. ஆனால் எல்லாம் பழைய விஷயங்கள் தாம். புதியதாக அளிப்பது போல அளிக்கப்பட்டது. டாக்டர் நெப்போலியன் ஹில் தமது மனம் தரும் பணம் (Think and Grow Rich)புத்தகத்தில் ஈர்ப்பு விதிக்கான சிறப்பான செய்முறையை விளக்கியிருப்பார்.

ஆனால் மனதில் கேட்டது எல்லாம் கிடைக்கவில் லையே என்று ஆதங்க படுபவர் பலர் இருக்கிறார்கள். ஈர்ப்பு விதி தனியே செயல்படுவதில்லை. மாறாக மற்ற பிரபஞ்ச விதிகளுக்கு எந்த விதமான பங்கமும் வந்து விடாத படி, அவையோடு இணைந்தே செயல்படுகி றது. சில சமயம் நாம் கேட்கும் விஷயங்கள் நியாயமாக இருக்காது. அது பிரபஞ்சத்தின் ஒழுக்க நியதிக்கு பங் கம் விளைவிப்பதாகும். அந்த இடத்தில் அது பலிக்காது. எனவே பலரும் இது எல்லாம் கட்டுக்கதை. காதில் பூ சுற்றுகிறார்கள் என்கிற கணக்கில் பேசிவிட்டு இந்த பிர பஞ்ச விதிகளை எல்லாம் அப்படியே கிடப்பில் போட்டு விடுவர். ஆனால் அவர்களுக்கு நாம் இதுவரை கடந்த அத்தியாயங்களில் கண்ட அபரிமிதத்தின் உண்மைகள் புரியாததே காரணம்.

நான் சொல்லும் நியாயம் என்பது எல்லை கிடையாது. மற்ற விதிகள் ஏதோ ஒரு இடத்தில் மீறப்படுகிறது என் றால் இப்படி நடக்க வாய்ப்பு இருக்கிறது. ஆனால் நமது எண்ணமும் செயலும் சரியான அலைவரிசையில் செயல்படும் பொது இந்த தவறு நேர வாய்ப்பே இல்லை. நமக்கு தேவையான வாழ்க்கையின் யதார்த்தத்தை உருவாக்க கீழ்வரும் சில குறிப்புகளை அமெரிக்க ஈர்ப்பு விதி பயிற்று நிபுணர் கில் எட்வர்ட்ஸ் தெரிவிக்கிறார்.

- கேளுங்கள் கொடுக்கப்படும்

- உங்கள் எதிர்ப்பைத் தவிர வேறு எதனாலும் உங்களைத் தடுக்க முடியாது.
- நீங்கள் எதில் கவனம் செலுத்துகிறீர்களோ, அது உங்களுக்கு கிடைக்கிறது.
- பிரபஞ்ச சக்தியின் ஓட்டத்தோடு இணைந்து செயல்படுங்கள்.
- ஒருமுறை அந்த ஓட்டத்தோடு நீங்கள் இணைந்துவிட்டால் உங்கள் கனவுகள் நிச் சயம் நனவாகும்.

இவை என்னவோ வெகு சாதாரணமாக ஆனால் சிக் கல் நிறைந்த செயல்பாடுகளாக தோன்றினாலும் இவை மிக எளிதானவை. ஒரு மாயாஜாலமும் இதில் இல்லை. எல்லாம் எல்லைக்குட்பட்டதே என்ற குறுகிய மனப் பான்மையை விட்டு உண்மை இறைதத்துவத்தை அது இருப்பது போல் அபரிமிதமாக காணப் பழகிவிட்டால் தானாகவே பிரபஞ்ச சக்தியின் ஓட்டத்தோடு நம்மால் ஒத்திசைந்து ஓட முடியும். அப்போது ஈர்ப்பு விதி சிறப் பாக வேலை செய்யும். நமது கனவுகள் நனவாகும்.

# நமக்கு வேண்டுவனவற்றை அபரிமிதத்தில் இருந்து பெறுதல்

ஆக இதுவரை நாம் கண்டது என்ன?

- நாம் ஒரே மூலத்தில் இருந்து தான் படைக்கப்பட்டிருக்கிறோம்.
- பிரபஞ்சத்தில் காணும் அனைத்து தோற்றங்களும் அதாவது கிரகங்கள், நட்சத்திரங்களில் தொடங்கி உயிரினங்கள் வரை அனைத்தும் அந்த மூலசக்தியின் அபரிமித ஆற்றலில் இருந்து தோன்றியவையே ஆகும்.
- நாம் ஒவ்வொருவரும் அந்த இறைநிலையின் படைப்பு சிதறல் ஆகிறோம்.
- நமது இயக்கத்திற்கு வான்காந்தம் மற்றும் ஜீவகாந்தம், அவற்றின் இணைப்பு ஆகியவையே காரணம்.

- இந்த காந்த புலம் அமையப்பெற்றும் அதன் அலைவரிசைகளின் தாக்கமும் சேர்ந்து தான் செயல் விளைவுகளை ஏற்படுத்துகிறது. படைப்பு தத்துவம் இதுதான்.
- எனவே எண்ணங்கள் எனப்படும் அதிர்வலைகள் சரியான அலைவரிசையில் காந்த புலத்தில் வெளிப்படும் போது அதற்கு தகுந்தாற் போல் விளைவு வெளிப்படுகிறது.

ஒரே மூலத்தில் இருந்து தான் நாம் தோன்றியிருக்கிறோம், அதன் செயல் தத்துவத்தை உணர்ந்து அதனோடு அதன் இணையான அலைவரிசையில் ஒத்திசைந்து எண்ணங்களை வெளிப்படுத்தும் போது அந்த அபரிமிதத்தில் இருந்து நமக்கு தேவையானது வெளிப்படுகிறது. நமது எண்ணங்களை நாம் சரியான அலைவரிசையில் வெளிபடுத்தும் போது நமது விருப்பம் எதுவானாலும் அது அந்த எல்லையற்ற இறைநிலையில் இருந்து அதன் அள்ள அள்ள குறையாத அபரிமிதத்தில் இருந்து நிறைவேற்றப்படும்.

உதாரணத்திற்கு நமக்கு ஒரு பொருள் தேவை. அது வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி அபரிமிதத்தின் அலைவரிசையோடு ஒத்து போகும்போது, அந்த எண்ண அதிர்வலைகள் வான்காந்த புலத்திற்கு எட்டுகிறது. எந்த ஒரு செயலும் ஒரு விளைவை ஏற்படுத்தும் என்ற பிரபஞ்ச விதிப்படி அந்த அதிர்வலைகளின் பதிலாக வேண்டிய பொருள் நமக்கு வேண்டி படைக்கப்படுகிறது. அது புதியதாக வேண்டும் என நம் மனம் நினைக்குமேயானால், நமது எண்ண அலைவீச்சு அதிகமாக இருக்குமேயானால், அதை பிரபஞ்சம் நமக்கு வேண்டி ஏதாவது ஒரு வழியில் அதை நமக்காக புதியதாக உருவாக்கி தருகிறது.

**ஸ்டீவ் ஜாப்ஸ்-ன் கதை**

எல்லோருக்கும் ஸ்டீவ் ஜாப்ஸை கம்ப்யூட்டர் உல கின் சக்ரவர்த்தி என்றும் ஆப்பிள் கம்ப்யூட்டர்களின் படைப்பாளி என்று மட்டுமே தெரியும். ஆனால் அபரி மித ஆற்றலால் உண்மையில் பயனடைந்தவர் அவர் என் பது எத்தனை பேருக்கு தெரியும். சாமான்ய மக்களும் பயன்படும் விதம் கம்ப்யூட்டர் உருவாக்க வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தார் ஸ்டீவ் ஜாப்ஸ். எத்த னையோ சோதனை முயற்சிகள் தோல்வி அடைந்தன. ஆனால் மனம் தளரவில்லை. சிறு வயதில் இருந்தே படைப்பு திறன் அவருக்கு அதிகமாக இருந்தது. கல் லூரியின் படிப்பைவிட ஓவியங்களும், சிற்பங்களும் அவ ருக்கு பிடித்திருந்தது. கல்லூரியில் படிக்கும் காலத் தில் எழுத்துருக்களை படைக்கும் வகுப்பில் அவர் இணைந்திருந்தார். அதை ஆங்கிலத்தில் டிப்போகி ராஃபி (TypoGraphy) என்பர். படைக்கும் ஆற்றல் அவரி டம் அதிகமாக இருந்தது. ஆனால் அவரின் ஆரம்ப கால வாழ்க்கை ஏனோ மனதில் ஒட்டவேயில்லை. எதே னும் பெரிதாக சாதிக்க வேண்டும், பெரிதாக படைக்க வேண்டும் என்ற எண்ணம் மட்டுமே மனதில் தங்கியி ருந்தது. அவரது இளமை பருவத்தில் அவர் இந்தியா, சீனா போன்ற நாடுகளில் தத்துவ விசாரணயில் சுற்றி திரிந்தார். அந்த ஞானம் அவருக்கு அவருடைய கனவு கம்ப்யூட்டரான ஆப்பிள் பெர்சனல் கம்ப்யூட்டர் உரு வாக்கும் போது பயன் பட்டது. எது தேவையோ அதை அந்த அபரிமிதத்திடம் இருந்து வேண்டும் என்று திட்ட வட்டமாக கேட்டார். கேட்டுகொண்டேயிருந்தார்.

மக்கள் பயன்படுத்த கூடிய கம்ப்யூட்டரா, அது சாத்திய மேயில்லை? என்று ஐ.பி.எம் போன்ற பெரிய நிறுவனங் கள் அவருக்கு மறுப்பு தெரிவித்து கை விரித்து விட் டன. சக நண்பர்களும் அது சாத்தியமே இல்லை. "மக் களுக்கு கம்ப்யூட்டர் எதற்கு உபயோகப்பட போகிறது?" என்று கேள்வி எழுப்பினர். அதிலும் அவர் எப்படி காகி

தத்தில் எழுத்துருக்களை படைத்தாரோ அதே போல் மாயஜாலம் காட்டும் விதமாக தனது கம்ப்யூட்டரிலும் அமைய வேண்டும் என்று திட்டவட்டமாக இருந்தார். அப்போதெல்லாம் கம்ப்யூட்டரில் எழுத்துக்கள் தெரிவதே பெரிய விஷயம், அதில் இவர் எழுத்துருக்கள், படங்கள் எல்லாம் கேட்கிறாரே என்று எல்லோரும் சஞ்சலப்பட்டனர். ஆனால் அவர் தமது முடிவில் இருந்து மாறவில்லை. கடைசியில் உலகில் சாத்தியமேயில்லை என்று பல முன்னணி நிறுவனங்களால் கைவிடப் பட்ட அந்த கம்ப்யூட்டர் உருவாக்கப்பட்டது. அதுவும் வேலை கற்றுக் கொள்ள வந்த சில இளம் நிபுணர்களின் துணைக் கொண்டே அது உருவாக்கப் பட்டது. அவருக்காக அதன் செயல்வழிகள் மர்ம முடிச்சுகள் அவிழ்க்க பட்டது போன்று உடனே உடனே நடந்ததாக அந்த முதல் கணினியை உருவாக்கியவர்கள் தெரிவித்து உள்ளனர். இது எவ்வாறு நடந்திருக்க கூடும். அவரது ஆத்மசக்தியும், அவரது எண்ண அலைகளும் தான் இதற்கு காரணம். கம்ப்யூட்டர் என்பது மனித இனமே முதல் முதலாக காண ஆசைப்பட்ட பொருள். அது ஆனால் படைக்கப்பட்டது. ஒரு மனிதனால் அல்லது ஒரு குழுவினர் மட்டும் நினைத்திருந்ததனால், வடிவமைத்ததனால் மட்டும் அல்ல. அந்த வடிவமைப்பின் திட்டங்கள் அந்த அபரிமிதத்திடம் இருந்து பெறப் பட்டது. அனைத்து கண்டுபிடிப்புகளும் இவ்வகையை சார்ந்ததே. மனம் சஞ்சலப்படும் நேரங்களில் அவர் அமைதிக்காக அங்கு அமெரிக்காவில் இருந்த ஹரே ராமா ஹரே கிருஷ்ணா கோவிலுக்கு போவதை வழக்கமாக கொண்டிருந்தாராம். அப்படி அங்கு சென்று தான் கண்ட இறைஞானம் தான் தன் முதல் கம்ப்யூட்டரை வடிவமைக்க உதவியது என்று அவர் ஸ்டான்ஃபோர்ட் பல்கலைக்கழகத்தில் உரையாற்றியபோது சொல்லியிருக்கிறார்.

இப்படி கண்கள் காணாத ஒரு பொருளையே தனது சிந் தனை சக்தி கொண்டு ஒரு மனிதன் உருவாக்கும் போது நம்மை சுற்றி இருக்கும் விஷயங்கள், நமக்கு விருப்ப மான தேர்வுகள், நமக்கு தேவையான பொருள் போன்ற வற்றை நம்மால் உருவாக்க முடியாதா என்ன?

அதற்கு நமது மனதின் குறுகிய மனப்பான்மையை விட் டொழித்து ஸ்டீவ் ஜாப்ஸ் போன்ற பல படைப்பாளிகள் பயன்படுத்திய அதே அபரிமித ஆற்றல் சக்தியை நமது விருப்பங்கள் நிறைவேற எப்படி பயன்படுத்த வேண்டும் என்று புரிந்து கொண்டால் போதும்.

# நிபந்தனை இல்லாமல் நிறைவாக கொடுங்கள் எல்லையில்லாமல் பெறுங்கள்

எல்லாம் அபரிமிதமாக இருக்கிறது என்று கண்டோம். ஆனால் நம்மில் ஒரு சிலர், ஏன் ஏனையோர் என்று கூட சொல்லலாம், தாம் சம்பாதித்ததில் சிறிய ஒரு பகுதியை தானம் செய்ய தயங்குவர். இதுவும் பற்றாக்குறை எண்ணம் கொண்டு வருவதால் தான். அனால் பிரபஞ்சம் அப்படி செயல்படு வதில்லை. பிரபஞ்சத்தின் கொடுத்தல் மற்றும் பெறுதல் விதியை அறிந்தவர்களுக்கு அதை பற்றி தெரிய வாய்ப்பு இருக்கிறது.

நமக்கு வழங்கப்பட்டு வரும் ஒரு அறிவுரை உண்டு.

நீ பணக்காரனை கூப்பிட்டு உன் வீட்டில் அவனுக்கு விருந்தளிக்காதே. அவன் அதே விருந்தை உன்னை அவன் வீட்டுக்கு உன்னை வரவழைத்து திருப்பி கொடுத்து விடுவான்.

ஆனால் நீ ஏழை எளியவர்களுக்கு அதே விருந்தை அளித்து பார். அவர்களால் அதைத் திருப்பிக் கொடுக்க இயலாது. அதை கொண்டு அவர் மீதும் உன் தயாள குணம் மீதும் பரிவு கொண்ட இறைவன் உனக்கு கடன் பட்டு விடுகிறான். அதன் பலனாக உன் வாழ்க்கையில் பல அற்புதங்கள் நடக்கும். காத்திரு.

எல்லாவற்றிலும் நிறைவான எல்லையில்லாத பரம்பொ ருளான இறைநிலை நம்மிடம் கடன் படுகிறது என் றால் என்ன அர்த்தம். அந்த கடனை செலுத்த அது எவ்விடமிருந்து எடுத்து கொடுக்கும். அந்த வற்றாயி ருப்பிலிருந்து தானே? பெற்றதற்கு கொடுக்க வேண்டும், கொடுத்தே ஆக வேண்டும் என்பது பிரபஞ்ச நியதி. ஏனென்றால் கொடுத்தல் என்பது செயல். செயலுக்கு நிச்சயம் ஒரு விளைவு உண்டு என்பது தானே இயற்கை நியதி. நியூட்டனின் மூன்றாம் விதி ஞாபகம் வருகிறதா? நியூட்டன் எழுதிய யாவும் பிரபஞ்சத்தில் இருந்து பெறப் பட்ட தத்துவங்களே.

செயல் விளைவு தத்துவம் நமக்கு தெரிவிக்கும் கருத்து என்ன? நாம் நல்லது எண்ணினால் நல்லதே நடக்கும் எனவும், கெடுதல் எண்ணினால் கெடுதல்தான் நேரும் என்பது தான் அல்லவா? எல்லையற்ற பிரபஞ்சத்திடம் இருந்து பெறப்பட்ட பணம் பொருள் எல்லாம் ஒரே இடத்தில் தங்கி விடக்கூடாது. அப்படி தங்கி விடவும் முடி யாது. எப்படி பெருங்கடலில் இருந்து ஆவியாய் வெளி யேறிய தண்ணீரானது மீண்டும் மழையாய் பூமியில் பெய்

கிறதோ அதே போல் இது ஒரு சுழற்சியாக மீண்டும் மீண்டும் அங்கு சென்று இங்கு திரும்பும். ஆனால் அது சுழல வேண்டும். ஆனால் இயற்கையின் போக்கிற்கு மாறாக அதை தடுக்க நினைக்கும் போது அது முரண் பாடாக செயல்படுகிறது. எங்கு பற்றாக்குறை வந்து விடுமோ என்ற எண்ணம் தான் பணத்தை பொருளாக, சொத்தாக சேர்த்து வைக்கத் தூண்டுகிறது. எப்போது அபரிமித எண்ணம் குறைந்து பற்றாக்குறை எண்ணம் தலை தூக்குகிறதோ அப்போதே அங்கு குறைகள் குடி கொள்ள ஆரம்பித்து விடும். ஏனென்றால் அபரிமிதம் என்ற பிரபஞ்ச கொள்கைக்கு எதிராக மனம் செயல் பட ஆரம்பிப்பதுதான் காரணம்.

எனவே தான் நாம் பெற்ற அனைத்து செல்வங்களும் அந்த வற்றாயிருப்பிலிருந்து பெறப்பட்டதே என்ற எண் ணத்துடன் அதே அபரிமித மனப்பான்மையோடு இருப் பதற்கு தகுந்தாற்போல் கொடுக்கத் தயாராக வேண் டும். அப்படி கொடுக்கும் போது இறை நிலை பெறும் நிலையில் இருக்கிறது பெற்ற அது மீண்டும் கொடுக்க தயாராகிறது. சுழற்சி தொடர்கிறது. அபரிமிதத்தின் மீது முழு நம்பிக்கையுடன் தரப்படும் எதுவும் அந்த மனப் பாங்கோடு இணைந்து நின்ற நிலையில் பன்மடங்காக திரும்ப வருகிறது. இதுவே பிரபஞ்ச நியதி.

எனவே நீங்கள் செலவு செய்யும் பணத்தை போலும் வாழ்த்தி செலவு செய்யுங்கள். வெறும் பொருள் தானம் தர்மம் மட்டுமல்ல இப்படி செய்யும் வாழ்த்தும் ஒரு விதமான தானம் தான். நீங்கள் தரும் அந்த பணமா னது வாங்குபவரின் தேவையை எவ்விதமான குறையும் அன்றி தீர்க்கவும், நோயற்ற வாழ்வு வாழவும், பசிப்பிணி இல்லாது வாழவும் இந்த பணம் உதவட்டும் என்ற வாழ்த்துடன் தரவும். அப்படி தரும்போது அந்த வாழ்த்து ஒரு மந்திரஜாலத்தை செயல்படுத்துகிறது. எல்லை யில்லா பேராற்றலான இறைநிலை அந்த வாழ்த்து செய்

தியை தானமாக பெறுகிறது. உற்றவரிடம் அதை சேர்த்து அந்த கடனை தங்களுக்கு அடைக்க அது எத்தனிக்கிறது. அப்போது தாங்கள் அளித்த பணமானது ஏதாவது ஒரு வழியில் பன்மடங்காக திரும்ப வருகிறது. அது உண்மையில் மந்திரமோ தந்திரமோ அல்ல. எங்கும் நிறைந்து இருக்கும் எல்லையில்லா பிரபஞ்சத்தின் அபரிமிதமான செயலாற்றல் தான் அது.

கொடுக்கும் போது எதையும் பெறுபவரிடம் எதையும் எதிர்பார்க்காமல் நம்பிக்கையுடன் கொடுங்கள். நிபந்தனையற்ற இந்த பாந்தமானது அபரிமிதமான பிரபஞ்சத்தில் கணக்கு அபரிமிதமாகவே வைக்கப்படும்.

# அபரிமிதமும் நன்றியுணர்வும்

இந்த பிரபஞ்சம் எல்லையில்லாமல் அபரித மாய் இருக்கிறதே என்பதே நாம் நன்றி தெரி விக்க வேண்டிய ஒரு விஷயம். காரணம் எதுவும் இங்கு ஒரு எல்லைக்கு உட்பட்டது இல்லை. நாம் மனதில் வார்த்து வைத்து இருக்கும் எல்லைகள் யாவும் நாமாக உண்டாக்கியது. ஆனால் எல்லையில் லாத ஒன்றோடு ஒன்றி விட்டால் எந்த எல்லைகளும் நமக்கு பொருந்தாது. குறைகள் உள்ள மனது மட் டுமே எல்லைக் கட்டி வாழ்ந்து கொண்டிருக்கும். இந்த உலகம் முழுவதுமே எல்லையில்லா அபரிமித ஆற்ற லால் சூழப்பட்டிருக்கிறது.

பைபிளில் ஒரு கதை உண்டு. அது யோபுவின் கதை. யோபு இறைவனின் தீவிர விசுவாசி. ஆனால் அவனது விசுவாசத்தை சோதனை செய்ய சாத்தானுக்கு இறை வன் அனுமதி அளிப்பார். அதன்படி சாத்தான் யோபு வின் அனைத்தையும் சூறையாடி அவனை மிகவும் மோசமான நிலைக்கு தள்ளி நோய் வாய்ப்பட செய்யும். அப்போது யோபுவைக் காண வரும் நண்பர் ஒருவர்

வினவுகையில் கடைசித் தருணத்தில் யோபு மிகவும் மனம் தளர்ந்து, "இறைவன் மிகப் பெரியவன் தான். அவனுக்கு நான் என்றென்றும் நன்றியுடைவனாக இருக்கிறேன். அவனால் தான் எனக்கு சகலமும் கிடைத்தது, ஆனால் ஏன் என்னை இப்படி சோதிக்கிறான் என்று தெரியவில்லை," என்று பேசுவார். அப்போது யோபுவின் சங்கடங்களை இனியும் காணவியலாத இறைவன் அசரீரியாக தோன்றி ஒலிப்பார்

"என் மீது நம்பிக்கை இழந்து விட்டாயா யோபு? மரத்தின் இலைகளைப் பார் அவற்றை உன்னால் எண்ணிவிட முடியுமா? வானத்து நட்சத்திரங்களும் விண்மீன் கூட்டமும் என்னால் படைக்கப் பட்டவையே. அவை எத்தனை என்று உன்னால் எண்ணிக் கூறிவிட முடியுமா? நம்பு என்னால் சகலமும் கை கூடும். மலர்களில் நிறம் என்னால். இத்தனை சக்தி படைத்த எனக்கு உன் நோய்களை குணப்படுத்தவும் என் மீது நீ கொண்டிருந்த நம்பிக்கைக்கும் நன்றியுணர்வுக்கும் எதுவும் கொடுக்க தெரியாதா?"

என்று யோபு இழந்த அனைத்தையும் திரும்ப கொடுப்பார்.

இது நிஜமா, கதையா, கற்பனையா என்பதை தர்க்கமாக எடுத்து கொள்ளாமல் உண்மையில் இங்கு உள்ளதை காண்போம்.

எத்தனை அழகானது இந்த பிரபஞ்சம்? இயற்கை அழகை காண கண் கோடி தேவை. ஆர்பரித்து வரும் அருவிகளும், பாய்ந்து ஓடும் நதிகளும், பச்சை பசப்போடு இருக்கும் வயல் வெளிகளும் நம்மை எவ்வளவு ஆனந்த படுத்துகின்றன. இவையெல்லாம் ஒரு எல்லைக்குள் கட்டிவிட முடியுமா நம்மால்? இத்தனை சுந்தரமான வாழ்க்கை வசதிகளை இந்த எல்லையில்லா

பிரபஞ்சம் தனது அபரிமித ஆற்றலால் அல்லவா அளித் துள்ளது. இந்த உணர்வு இருக்கும் போது, எப்போதும் குறை கூறும் மனப்பான்மையே வராது. ஏதேனும் குறை என்று வரும்போது நமக்காக உருவாகியுள்ள இந்த இயற்கையின் வனப்பை மனதில் எண்ணும் போது, இந்த அபரிமிதம் நமக்காக உணவு, இடம் போன்ற வற்றை அளித்த விதம் பற்றி எண்ணும் போது மனம் ஒருவித அலாதி சுகம் காணும். இத்தனைக்கும் மனம் நன்றிதான் தெரிவிக்கும். அப்படி தெரிவிக்கும் போது உண்மையில் என்ன நடக்கும் தெரியுமா? யோபுவிற்கும் இழந்தவை எல்லாம் திரும்ப கிடைத்ததை போல இறை நிலை வேண்டுவன எல்லாம் கொண்டு சேர்க்கும். நன் றியுனர்விற்கும், மகிழ்ச்சி மனப்பான்மைக்கும் பிரபஞ்சம் தரும் வெகுமதி அது. நன்றியை தானமாக கொடுக்கும் போது "கொடுத்தல் மற்றும் பெறுதல்" விதிப் படி பிரபஞ் சம் நாம் கேட்டவற்றை திரும்ப கொடுக்கிறது. அதற்கு உணர்வின் மொழிதான் தெரியும். இதைத்தான் யோபு செய்தான். இறைவன் மெச்சப்படவும் செய்தார்.

மனம் குறை எதுவும் சொல்லாமல் நமக்கு வழங்கப் பட்டதை எண்ணி நன்றியுணர்வோடு இருக்கும் போது மனம் தானே மகிழ்ச்சி அடைகிறது. அந்த மகிழ்ச்சி பல்கி பெருகி பன்மடங்கு நல்ல விஷயங்களை திரும்ப நம்மிடம் கொண்டு வந்து சேர்க்கிறது. அதுவே அபரி மிதத்தின் ஆற்றல். நாம் இதில் செய்ய வேண்டியதெல் லாம் இல்லை என்பதில் மனம் செலுத்தாமல் நமக்காக என்ன இருக்கிறதோ அதற்கு என்றும் நன்றி சொல்லு தலை கடைபிடித்தல் மட்டுமே.

எல்லாம் அபரிமிதமாக இருக்கும் போது பிரபஞ்சம் நமக்காக எதையோ ஒன்றை கருதி வைத்திருக்கிறது. கேட்டு பெற வேண்டியது மனம் மட்டுமே.
மனதின் குறைகளை காணும் போது எல்லைகள் பிறக் கின்றன. ஆனால் எல்லையற்ற ஒன்றின் புரிதல் நம்

மையே எல்லையற்ற ஆற்றல் படைத்த ஒருவராக மாற்றி விடுகின்றது. எல்லாம் அபரிமிதம் என்று மனதிற்கு புரியும் விதம் இந்த நூலில் முடிந்தவரை விளக்கப்பட்டுள்ளது. பிரபஞ்ச விதிகள் என்பது எளிதில் புரிந்து கொள்ளக் கூடியதே. அவற்றை பற்றி மட்டுமே உலகின் அனைத்து புராணங்களும், நூல்களும் சொல்லி வந்திருக்கின்றன. இவற்றின் அறிவோடு இந்த அபரிமித ஆற்றலை நாம் உபயோகப்படுத்த தெரிந்து கொள்ளும் போது வாழ்க்கை சிறப்பானதாக அமைகிறது. அபரிமித ஆற்றல் கொண்டு சகலமும் படைக்கும் ஒரு இணைப் படைப்பாளியாய் ஒருவரால் உருவாக முடிகிறது. இது வெறும் தத்துவம் அல்ல. நிரூபிக்கப்பட்ட ஒரு செயல் முறை. இதை வாசிக்கும் அனைவரும் இதனை செயல் படுத்தி சிறப்பானதொரு வாழ்க்கையை வாழவேண்டும் என்பதே இந்நூல் எழுதும் என்னுடைய நோக்கம். அனைவரும் அத்தகைய வாழ்க்கை பெற இந்த எல்லையில்லா பிரபஞ்சம் துணை நிற்கட்டும், அனைவரும் சந்தோசம், சமாதானம், நல்லிணக்கம் மற்றும் அனைத்து ஸௌபாக்கியங்களும் பெற்று சுக வாழ்வு பெற பிரபஞ்ச ஆற்றல் வழிநடத்தட்டும்.

வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!!
சமாதானம்! சமாதானம்!!